உ

கடவுள் துணை

க்ஷத்திரியர்களாகிய

வன்னிய பூபதிகள் பேரில்

மகாகவியாகிய கம்பர் பாடிய

# சிலை யெழுபது மூலமும்

பேழைக்குடி ம. துரைசாமி நாயகரவர்கள்

இயற்றிய தெளிவுரையும்.

வன்னிகுலமித்திரன் பத்திராதிபர்

ஆ. சுப்பிரமணிய நாயகரவர்களால்

பிரசுரிக்கப்பட்டது.

1915.

விலை அணா 6.] [தபாற் கூலி அ. 2.

சென்னை வேப்பேரி மதிகரவேணிவிலாசம் பிரஸ்.




உ

கடவுள் துணை.

# கம்பர் வரலாறு.

பூமணக்கும் பொழில் மலிந்த தமிழ் நாட்டிலே "சோழவளநாடு சோறுடைத்து" என்றபடிநீர்நில வளங்களாற்சிறந்த சோழமண்டலத்திலே, தஞ்சையை யடுத்த தேரழுந்தூர் எனவழங்கும் திருவழுந்தூரிலே கம்பர் வாழ்ந்திருந்தனர் என்பர். கம்பர்வீட்டில் நாடோறும் புதுமட்பாண்டங்களில் சமையல் செய்வது வழக்கமாகையால் பிரதிதினமும் சமையல்செய்தபாண்டங்களைக் கொல்லையில் ஓர் புறத்தில் எறிந்துவந்ததால் நாளடைவில் அவையோர் மேடாயின. கம்பருடைய வாழ்க்கைக்கு அறிகுறியாமாறு இம்மேட்டை எவரும் அழிக்காமல்விட்டதனால் நாளதுகாறும் அதுகெடாது "கம்பர்மேடு" எனவழங்கப்பட்டு வருகின்றது.

இவரை கம்பநாடென்னும்ஒருசிறுநாட்டையாண்டுவந்தசிற்றரசனுடைய புதல்வர் என்றும், ஒச்சன்வீட்டில் வளர்ந்தவர்என்றும் சிலர் கூறுகின்றனர். இவர் தன்மகன் அம்பிகாபதி இராசகுமாரத்தியை இச்சித்ததனால் அரசன்சினந்து அவனைக்கொன்ற காரணம்பற்றிப் பழிக்குப்பழிவாங்கத்தருணம் பார்த்திருந்தஇவர் வேட்டையாடும்போது ஒருயானையால் துரத்திவரப்பட்ட அவ்வரசகுமாரனை "காட்டானைவிட்டாலும் கவியானை விடுமா" என்று ஈட்டியால் குத்திக்கொன்றனர்; என்றதொரு கதையைக்கொண்டு இவர் க்ஷத்திரியரல்லராயின் அங்ஙனஞ் செய்யத் துணியாரெனச் சிலர் கருதுகின்றனர்.

"ஈடார்தருஞ்சோழ நாடதிலுறந்திரு வழுந்தூரினில்
பீடாருமோச்சக்குலத்தொருவனவ்வூர்ப் பெருங்கோயில்வாய்
நாடாறுதிக்குந் தொறுஞ்சென்று சங்கூதுநல்வேலையான்
கோடாமலதுசெய்து வருநாளுளொருநாளிற் கூருயிடை.

கம்பத்தினருகோர் சிசுக்கண்டுபெருகுங் களிப்போடெடுத்
தம்பத்தனையும்வென் றவிழியுற்றமனையாள்கை யதைநல்கினான்
கொம்பத்தவவண்மார்பிலமுதூறண்முதலாயகுணமெய்தலால்
நம்பத்திகண்டசனருள்செல்வமிதுவென்னநனியெண்ணினார்.

கம்பத்தினடியிற்கிடந்திட்டதாற் கம்பனென்னப்பெயர்
உம்பர்க்குமெய்தாதபேறான பிள்ளைக்குவந்தோதினார்."

எனக்கூறும் புலவர் புராணத்தால் இவர் திருவழுந்தூர் ஓச்சன்வீட்டில் சிலகாலம் வளர்ந்தவர் என்பது உறுதிப்படுகின்றது.

கம்பத்தினடியிற்கண்டெடுக்கப்பட்டவராதலால் கம்பர் எனபெயர்பெற்றாரென்றும், காளிவரம்பெற்றுக் கவிபாடுமுன்னரே அறிவிலாச்சிறியராய்க்கம்பம்போல் இருந்தவராதலின் மற்றச்சிறுவர்கள் இவரைக் கம்பன் என்றழைத்த காரணத்தால் கம்பர்எனப்பட்டார் என்றும், இவர் ஓச்சன்வீட்டில் வளர்ந்து வருங்கால், திருவெண்ணெய் நல்லூர் சடையப்ப முதலியார் இவரைத் தம்மில்லறத்திற்கழைத்துவந்து தம்மைந்தரோடு இவரையுங்கூட்டி ஓர்கணக்காயரிடத்தில் அநுப்பி கல்விபயில்விக்க அவ்வுபாத்தியாயரது கம்பங்கொல்லையைக்காத்திருந்த காரணம்பற்றி கம்பர்எனவாயிற்றென்றும், அவ்வாறு கம்பங்கொல்லையைக் காத்துவரும் நாட்களில்ஓர்நாள்நடுப்பகலில் நித்திரைவர அங்கிருந்த காளிகோயிலிற் படுத்து தூங்கிவிடவும் ஒருகுதிரைவந்து கொல்லையை யழிப்பதாகக் கனவுகண்டு திடுக்கிட்டெழுந்து பார்க்க அவ்வாறே அவ்வூர் அதிகாரியாகிய காளிங்கராயனது குதிரைவந்து கொல்லையை அழித்தலைக் கண்டு அதனைஎவ்வளவு ஓட்டியும்ஓடாமல்மேயக்

கண்டு தமதுஉபாத்தியாயருக்கஞ்சி "கோ" என்றழுதனர். அங்ஙனம் அழுகின்ற அச்சிறுவர் முன்பாகக் காளிகாதேவி தோன்றி "நல்லிளஞ்சிறுவ! அழாதே நின்னுவை நீட்டு" எனவும் அவ்வாறேதம்நாவைநீட்ட அத்தேவி அவர்நாவில் கலைமகளாரது பீஜாக்ஷரத்தை எழுதிவிட்டுமறைந்துபோயினள். உடனே அம்மைந்தர்

வாய்த்தவயிரபுர மாகாளியம்மேகேள்
காய்த்ததினைப்புனத்திற் காலைவைத்துச்—சாய்த்துக்
கதிரைமாளத்தின்ற காளிங்கராயன்
குதிரைமாளக் கொண்டுபோ.

என்றொரு வெண்பாபாடவும் குதிரைத்துள்ளிவிழுந்துஇறந்துவிட இதுசங்கதிஉபாத்தியாயருக்குத்தெரிந்து காளிங்கராயன் இதனைக்கேட்டால் என்னசெய்வானோ என்று அஞ்சி நடுங்குவதைப் பார்த்து அவர் மகிழும்படி "குதிரைமீளக் கொண்டுவா" என்றகடைசியடியை மாற்றிப்பாடவும் உடனே அப்பரியுயிர்த்தெழுந்தது. இதனைக்கேள்வியுற்ற காளிங்கராயன்இவரைவரவழைக்க இவரும் கம்பங்கொல்லையைக் காத்திருந்த கம்பத்துடனே சென்றாராதலின் இவரைக் கண்ட அரசன் "இந்தகம்பனு அதுசெய்தவன்" எனக் கேட்டதனால் வந்தபெயரென்றும் பலவாறு கூறுகின்றனர்.

மகாகவிச்சக்கரவர்த்தியாகிய இவர் இராமபக்தியிலும் ஆழ்வார்பக்தியிலும் ஈடுபட்டிருப்பதைக்கண்டு வியந்த ஸ்ரீரங்கத்து வித்வாம்சர்கள் இவரைக் கம்பநாட்டாழ்வார் எனப்புகழ்ந்தனர். இவர்காலத்திருந்த புலவர்கள்புகழேந்திப்புலவர், ஒட்டக்கூத்தர், ஔவையார் முதலியவர்கள்.

கம்பர் இயற்றியநூல்கள் சரஸ்வதியந்தாதி, சிலையெழுபது, இராமாயணம், சடகோபரந்தாதி ஏரெழுபதுமுதலியன. இவற்றுள்;

சாஸ்வதியந்தாதி:—காளி அநுக்கிரகம்பெற்றசிறு பிராயத்திலேயே தமக்குமேன்மை யுண்டாவதற்குக் காரணமாகிய சரஸ்வதி தேவியை முப்பது பாட்டுகளைக்கொண்ட ஓரந்தாதியினுற் பாடித்துதித்தனர். கலைமகளும் இவருக்கு அருள்புரிந்து சமயாசமயங்களில் கிருபை பாலித்து வந்ததை கம்பர் இராமாயணம்பாடி அரங்கேற்றியது முதலிய சரிதங்களாலறியலாம்.

சிலையெழுபது:—வேந்தர்மதிக்கும்விரக்கவியாகிய இவர்அக்கினிகுலத்தரசர்கள்புகழ்ப்பொருள்விளங்கும் வண்ணம் க்ஷத்ரியர்களுக்குரிய அரசியலைத்தொகுத்து சிலையெழுபது என்னும் இப்பிரபந்தத்தைப்பாடி அக்காலத்தில் காஞ்சியில் அரசுபுரிந்த கருணாகரச் சோழனது சபையிற் கொண்டுபோய் அவனனுமதியால் மூதறிவோர் கேட்டுமகிழும்படி அரங்கேற்றுதல் செய்து, அம்மன்னனால் மகிழ்ந்து கொடுக்கப்பட்ட எழுபத்தொன்பதினாயிரம்பொன், தண்டிகை ஆபரணமுதலிய பூஷணங்களைப்பெற்றதோடு தாமனுபவம்பண்ணிவந்த நிலத்துக்குஅரசிறை கொடுக்கவேண்டியதில் வருஷம் ஆயிரம்பொன்தள்ளிக் கொடுக்கும்படியும் செய்து கொண்டனர். கருணாகரச் சோழன் தொண்டை மண்டலம் ஆண்ட சோழவரசனென்பதும், அவன் சமுகம் இதனைப்பாடிப் பரிசுபெற்றதென்பதும் இந்நூலின் 68-வது கவியில்விரிவாய்க் கண்டுகொள்ளலாம்.

இராமாயணம்:—மேற்கண்ட இரு நூற்களையும் இயற்றிய சிலவருடங்களுக்குப்பின்னர் இரண்டாவது குலோத்துங்கச் சோழனனுமதியின் பேரில் இக்கவிச் சக்ரவர்த்தி இராமாயணத்தைப்பாடினராகையால்இவருடைய கவித்திறமை எல்லாம் ராமாயணத்தில் முற்றும் விளங்கிநிற்கின்றது.

சடகோபரந்தாதி:—இராமாயணத்தை ஸ்ரீரங்கத்திற்கொண்டுபோ யரங்கேற்ற யத்தனிக்கையில் ஸ்ரீமங்

நாதமுனிகள் கம்பநாட்டாழ்வாரை நோக்கி "நீ நஞ்சட கோபனைப்பாடினல்தான் நாம் உமது இராமாயணத்தைத் திருவுளம்பற்றுவோமென", அவ்வாறே நூறு கட்டளைக்கலித்துறையில் சடகோபரந்தாதியைப் பாடி முடித்தார்.

ஏரெழுபது:—கம்பர் பேரும்புகழும் எய்திய பின்னரே தன்னை வளர்த்த திருவெண்ணெய் நல்லூர் சடையப்பமுதலியார் செஞ்சோற்றுக்கடனைத்தீர்க்கும் வண்ணம் வேளாளர்பேரில் ஏரெழுபதைப்பாடினர்.

சிலையெழுபதைப் பாடியகாலம்:—ராஜேந்திர பல்லவராயன், கோவிராஜகேசரிவர்மன், கோவிராஜசக்ரவர்த்திகள் என்று சாசனங்களாலும், ஜயதரன், ஜயதுங்கன், குலோத்தமன், அபயன் எனக்கலிங்கத்துப் பரணியாதிகளாலும், அநபாயச் சோழனெனப்பெரிய புராணத்தாலும், வழங்கப்படுபவனாகிய முதலாவது குலோத்துங்க சோழனிடம் கருணாகரத் தொண்டனென்பவன் மந்திரியாகவும் சேனைத் தலைவனாகவும் இருந்து கலிங்கதேசத்தின் பேரிற் போருக்குச் சென்று அந்நாட்டைச் செயித்துத் திரும்பியவனென்று ஜெயங்கொண்டான் பாடிய கலிங்கத்துப் பரணியில் நன்கு உணரக் கிடக்கின்றது. முதலாவது குலோத்துங்கன் கி. பி. 1070 முதல், கி. பி. 1118 வரையில், அரசாண்டவனென்று சரித்திர ஆராய்ச்சியில் வல்லோர் பலர்முடிவுகட்டி யிருக்கின்றனர். முதலாவது குலோத்துங்கனுக்குப்பிறகு சிலகாலம்கருணாகரன் காஞ்சியில் அரசு புரியும் சமயத்தே கம்பர் இந்நூலை அவனது சமுகத்தேஅரங்கேற்றினரென்பது கூறுதிப்படுகிறதால் சுமார்800-வருடங்களுக்கு முன்னென்று ஏற்படுகிறது.

இனி இராமாயணத்தை எக்காலத்தில் இயற்றினரென ஆராயப் புகுவோமானல், நாம் மேலே கூறிய முதலாவது குலோத்துங்க சோழனது குமாரனாகிய

விக்கிரமச் சோழன் கி. பி. 1118 முதல், கி. பி. 1128 வரையில் அரசியற்றியவனென்றும், அவனது சமுகத்திலேயே ஒட்டக்கூத்தர் சமஸ்தான வித்வானயிருந்து அவன்பேரில் விக்கிரமச் சோழனுலாபாடினரென்றும் புலப்படுகின்றது; நிற்க,

ஷை விக்கிரமச் சோழனது குமாரனே இரண்டாவது குலோத்துங்கச் சோழனெனப்பெயர்பெற்றுகி.பி. 1128 முதல், கி. பி. 1158 வரையில் அரசியற்றியவன். அச்சோழனுக்கே ஒட்டக்கூத்தர் உபாத்தியாயராகவிருந்து கல்விபயிற்றி வந்ததனல்

"பாடும்புலவர்புகழொட்டக்கூத்தன்பதாம்புயத்தை,சூடுங்குலோத்துங்க சோழனென்றே யென்னைச் சொல்லுவரே"

என்றும் அம்மன்னனே கூறியிருத்தலாலும், கம்பரையும், கூத்தரையுங் கொண்டு இராமாயணத்தைப் பாடும்படி செய்தவன் இரண்டாவது குலோத்துங்கச்சோழனே என்பதும் வெள்ளிடைமலை போல் விளங்குகின்றது.

இத்தகைய ஆதாரங்களை நாம் உற்றுநோக்குவோமாகில் கி. பி. 1090 க்குமேல் கி. பி. 1170 வரையில் சுமார் 80-வருடகாலம் கம்பர் ஜீவித்திருந்தவரென்பதும், தமது ஜீவதிசையின் முற்பகுதியில் சிலேயெழுபதைப் பாடினரென்பதும் மறுக்கமுடியாத விஷயமாகும். இவரது சரிதையை ஆராயப்புகுவோர்சிலர் முதலாவது குலோத்துங்கன், இரண்டாவது குலோத்துங்கன் என்பவர்களது காலவரையும் இவர்கள் மெய்க்கீர்த்தியையும் அறியாது மயங்குவர். முதலாவது குலோத்துங்கச் சோழன், ஏகசக்ராதிபதியாயரசியற்றியவன்; கலிங்கத்துப் பரணிகொண்டவன். சேக்கிழார் பெருமானுக்கு உத்தமச்சோழப்பல்லவன் என்றஉயர்பட்ட மளித்து அவருக்கு வேண்டிய உதவி புரிந்து பெரியபுராணத்தைப் பாடும்படி செய்தவன்;

பொன்னம்பலத்தில் பொன்வோடு மேய்ந்து அச்சுப தினத்தைக் குறித்து,

"நானிலத்தைமுழுதாண்ட ஜயதரர்க்குநாற்பது நாலாண்டில்,
மீனனிகழ்நாயற்று வெள்ளிபெற்ற உரோசனிநாளிடபம் போதல்,
தேனிலவு பொழிற்றில்லை நாயகர்தங் கோயிலெலாம் செம்பொன்
மேய்ந்தா, னெனவருந் தொழுதேத்தும் ராஜராஜன் குந்தவைபூ
விந்தையாளே"

என்ற விருத்தப்பாவால் தில்லைநடராஜர் கோயில் உள்பிரகாரத்து வடசுவரில் கண்ட சாசனத்தை நாட்டியவனுமாவன். இவன் மகாசிவபக்தனென்று உமாபதி சிவாசாரியார் கோயிற்புராணத்தில் புகழ்ந்துரைத்துள்ளார். இம்மன்னனது காலத்தில் கம்பர் இராமாயணம் பாடினாரென்று கொள்வது முரண்படும். இவனது காலத்திற்குப்பிறகே கம்பர் இரண்டாவது குலோத்துங்கன் காலத்து இராமாயணத்தைப் பாடிமுடித்தார்.

சிலையெழுப தென்னும் இப்பிரபந்தத்தின் கருத்து:- "சேர, சோழ, பாண்டிய, பல்லவர்களாகிய வன்னியர்கள் முதலில் தெய்வத்தை வணங்கி குரவர்களைப் புகழ்ந்து, வேதசாஸ்திரவிதி வழுவாவகையாக சுபதினத்தில் வில்லை யெடுத்துப் பயின்று பகையை அழித்துச் சயமடைந்து, நால்வகைச்சேனைகளோடும் அரண்களை யுடையவர்களாகி, துவசத்தை நாட்டி, அரசாக்ஷி மண்டபத்துள் சிங்காசனத்தின் மேலமர்ந்து, முடி சூடி, மகரகேயூர கிரீடந்தரித்து, சந்திரவட்டக் குடை நிழல் செய்யுப்படி செங்கோல் நடையினால் ஆக்கினைசக்கிரத்தைச் செலுத்தி, தொழிலெனறி பிறழாது முத்திரை மோதிர மணிந்து, துஷ்ட நிக்கிரகஞ் செய்து, காவல் புரிந்து, யாவரும் தொழுதன் முதலியவை செய்ய செல்வாக்கினால் புகழைபடைந்து, சுற்றஞ்சடிந்து, பெருந்தன்மையோடும் இதய வண்மையுடையவராகி, தேவர்களும் பிராமணர்களும் இலக்குமியும் மன்னவர்களும் பெண்களும் வித்வான்களும்

பகைவர்களும் முறையே வியக்கவும், வாழ்த்தவும், வசிக்கவும், திறையளக்கவும், நடிக்கவும் துதிக்கவும், வணங்கவும், ஏற்றதாய இராஜ சமுகத்தோடும் பெரும்பதி இருந்து; அரசர்கள் புடைசூழ நெறி தவறுது, சாந்த முதலிய குணங்களோடு நிறைந்து, ஈதல் வள்ளற்றன்மையுயர்ந்து, அடுத்தவர்களுக்குத் தாழ்வைத்தராது, உமையருளோடும் அகண்ட ஐசுவரியத்தையும் தசாங்கத்தையும் உடையவர்களாகி, தமது குல ஒழுக்கப்படி மனுமுறை வழுவாது அரசு புரிந்து வருகின்ற இவர்களது வில்லைத் தேவரும், மூவரும், அகத்தியனும், அனந்தனும் கூறல் வேண்டுமே யொழிய எம்போல்பவராற் புகழுந் தகமையதோ சொல்வீர்களாக வென" கருணாகரன் கேட்டு பரிசுகொடுக்கக்கப்பர் பெற்றுக்கொண்டு துதித்தது என்பதாம்.

இந்நூல் உரையெழுதுவதற்காக முயற்சியெடுத்துக்கொண்ட குலாபிமான கனவான்களாகிய இராஜ வன்னியராஜஸ்ரீ, பூந்தோட்டய வன்னிகுலசேகர, வி. குருசாமி ராயர், காரைக்கால், வ. இராமலிங்க படையாட்சியார், நாகப்பட்டினம், அரங்க இராமசாமி நாயகர், காரைக்கால் சாஸ்திர ஆராய்ச்சி வி. குருசாமிபடையாட்சியார்முதலியவர்களுக்கும், சிரமம்பாராதுஉரையெழுதிமுடித்த பேழைக்குடி, ம. துரைசாமி நாயகர் அவர்களுக்கும் எனதுமனப்பூர்வமான வந்தனத்தைச் செலுத்தக் கடமைப்பட்டுள்ளேன்.

இந்நூலை ஸ்ரீமான், வன்னி குலோத்தாரணர் கா. கோபால் நாயகரவர்கள் தாம் வெளியிடவேண்டுமெனக் கருதியிருந்தனர். அவர் காலஞ்சென்றுவிட்டமையின் அவரது ஞாபகார்த்தமாசயான் இப்போது இதனைப் பிரகடனஞ் செய்துள்ளேன். இந் நூல் நிலவுலகின் கண் நின்று நிலவுமாறு எல்லாம் வல்ல இறைவனருளைச் சிந்திக்கின்றனன்.

வன்னிகுல மித்திரன், }
பெரம்பூர் பாரக்ஸ் } ஆ. சுப்பிரமணிய நாயகர்.
மதராஸ். 1915. }

# சாத்துக்கவிகள்.

கும்பகோணத்தில் விளங்காநின்ற

ஜகத்குரு: ஸ்ரீசங்கராசாரிய ஸ்வாமிகள்

ஸ்ரீமடத்தின் ஸன்னிதான சபையின்

ஜ்யோதிஸ் தந்திர ஸூக்ஷ்ம தர்சிகளான

பிரம்மஸ்ரீ சுந்தரேசுவர சிரௌதிகள் குமாரரும்

பண்ருட்டி ஸப் ரிஜிஸ்தாருமாகிய

T. S. விசுவநாத சிரௌதிகள் பி. ஏ.,

அவர்கள் இயற்றிய விருத்தம்.

அலைகடற் புவியை யாண்ட வங்கி மன்னவரை யேற்றி
கலைவள மிகுந்த கம்பன் கழறிய காமர் நூலாஞ்
சிலையெழு பதினை யேற்ற தெளிவுரை யொன்றுசேர்த்தி
நலமிகு சுப்ர மண்ய நாயக னச்சிட் டானே.

சேலம்ஜில்லா ஓமலூர் தாலூக்கா

வெள்ளாளப்பட்டி, பண்டித பரம்பரை

பிரம்மஸ்ரீ, சாமய்யர் அவர்கள் குமாரர்

S. கிருஷ்ணசாமி அய்யரவர்கள்,

இயற்றிய விருத்தம்.

பொன்னறம் பொதியு மேனிப் பூவையாட் சுமந்த பேற்றை
யின்னறை யிளகுங் கையா லேந்தியிப் படியை யோச்சும்
மன்னறங் கொண்ட கோசேர் வன்னியர் புகழை மேனாள்
நன்னெறி யாக வன்றே நவின்றனன் கம்ப நாடன்.

வேறு.

காவிருக்குங் கனகமணி யிருநிதிய மமுதமிருங்
கடவு ணாட்டின்
கோவிருக்கும் பதியியலுங் கோவிந்தன் முதலாயோர்
கொள்ளும் பெற்றி
மாவிருக்கும் மண்ணுலகாள் வன்னியரின் மாக்ஷியுமிழ்
வசத்த தென்றே
நாவிருக்கு நாக்கம்ப நாடனருஞ் சிலையுலகி
னாட்டி னானே.

நாட்டியசெம் பொற்சிலையா மெழுபதினை வரைந்து
நாடன் சொன்ன [கம்ப
பாட்டியலின் பொருளனைத்தும் பாவகர்க்கும் பாரோ
பார்த்துத் தீர்ந்தேன் [ர்க்கும்
ஊட்டிநிலை நிறுத்தவெனப் பதத்தியலை யனுசரித்தின்
னுரையை யோங்கித்
தீட்டியளித் தானுலகில் துரைசாமி வர்மனெனுஞ்
செவ்வி யோனே.

பொன்மணக்கும் மானுடைய பூமணக்கும் பதிமணக்
புத்தே ளாய [கும்
மன்மணக்கும் மகிமணக்கும் மன்பதைக ளேமணக்குங்
வன்னி யோர்கை
வின்மணக்குங் குலமணக்கும் மேன்மேலும் விதிமணக்
விளக்க மாகச் [கும்
சொன்மணக்கும் பனுவல்களின் சுவைமணக்கு மோரு
சொல்லுங் காலே [ரையைச்

வேறு.

இக்குவல யத்துளுபர் வுற்றிடுசெம் பொற்சிலையி
லட்சணசு விர்த்தி புரையாய்ந்
தெக்குல முதித்தவரு மொப்பிடு மகுத்துவ
மிதற்குள தெனக் கருதியே
பக்குவ மிகுத்தவா னக்கினி குலத்திலுகன்
பட்சமிகு சுப்ரமணியன்
மிக்கபொரு ளைச்செல விடுத்திதனை யச்சுதவி
மெய்ப்புகழ் படைத்தனனரோ.

வேறு.

முற்காலத் தங்கிகுல முறைமை விளக்கியகம்பர்
முதன்மை யென்கோ
பிற்காலத் ததனைமொழி பெயர்த்தவரைப் பெரிதென்
பின்பு பேணும் [கோ
நற்காலம் வாய்த்திகத்தி னுட்டியசுப் பிரமண்ய
நாயகப் பேர்
தற்காலம் பெரிதென்கோ தாரணியில் நாமுரைக்குந்
தகைமை யென்னே.

---

மதுராந்தகந்தாலூகா மலைவையாவூர்,
கோயில் குமாண்டேர் இளையவல்லி,
பிரம்மஸ்ரீ வரதாச்சாரியார் அவர்கள்
அபிப்பிராயம்.

சிலை யெழுபது என்னும் பிரபந்தம் வரப்பெற்
றேன். ஸ்ரீராமச்சந்திர மூர்த்தியினது திவ்ய சரி
தையை செந்தமிழிற் புனைந்த கவிச்சக்கரவர்த்தி யா

கிய கம்பநாட்டாழ்வார், அலைகடற் புவியை யாண்ட அக்கினிகுலத் தரசர்களின் குலவுற்பவம் குலமாட்சிமை அரசின் சிறப்பு முதலியவைகளை எழுபத்தொன்பது செய்யுட்களால் சொன்னயம் பொருணயம் விளங்கக் கூறியிருக்கிறார்.

இலக்கண இலக்கிய சங்க நூற்கள் யாவையும் ஒருங்கே கற்றுணர்ந்த பேழைக்குடி ம-௱-௱-ஸ்ரீ, துரைசாமி நாயகரவர்கள் நூலாசிரியரின் கருத்தைத்தழுவி ஆங்காங்கு ராமாயண முதலிய நூற்களின் மேற்கோள்களுடன் உரையெழுதியிருப்பது பெரிதும் புகழ்தற்பாலதே.

"வன்னிகுல மித்திரன்" பத்திராதிபர் ம-௱-௱-ஸ்ரீ, ஆ. சுப்பிரமணிய நாயகரவர்கள், கம்பர் வரலாற்றை முதலில் எழுதி சேர்த்திருக்கும் விஷயத்தில், கம்பர் எனப் பெயர்வந்ததற்கு காரணங்களும், அவரியற்றிய நூற்களும், அவரது காலத்தினை நிலை நாட்டியதும் தற்கால சரித்திர ஆராய்ச்சி செய்வோர் அனைவரும் கொண்டாடத் தக்கதே. பழைமையும், பெருமையும் வாய்ந்த இந்நூல் வெளிவந்ததற்கு அத்யந்த சந்தோஷப் படுகிறேன். குலாபிமான மேலிட்டால் தம்மா போனைவரும் இப்பிரபந்தத்திற் கூறும் அருமை பெருமையினை யுணர்ந்து கடைத்தேறுவார்களென இதனை வெளிப் படுத்திய நாயகரவர்கட்கு எம்பெருமான் கிருபை பாலிப்பாராக.



காஞ்சிபுரம், மஹா வித்வான்,

## ஸ்ரீமான். இராமசாமி நாயுடு அவர்கள்

இயற்றிய

### அறுசீராசிரிய விருத்தம்.

சீரேறு கவிச்சக்ர வர்த்திபெனத்
திகழ்பெபராற் சிறந்த கம்பன்
போரேறு வன்னியர்தம் புகழ்புவியி
லெஞ்ஞான்றும் பொலிந்து தோன்றப்
பாரேறு தமிழறிஞர் யாவருமேத்
தெடுப்பமுன்னாள் பகர்ந்த வின்சொற்
பேரேறு சிலையெழுப தெனுநூலோன்
றெழில்மிக்கு பிறங்கு மன்றே.

அன்னதனுக் குரையில்குறை யகத்துனிப்பே
மைக்குடிவா ழருந்தமிழ்க் கோன்
பன்னரிய துரைசாமி நாயகப்பேர்ப்
பருணிதன்வற் பலவும் வாய்ப்பச்
சொன்னயம்பற் பலவுமிக்குத் தோன்றவுரை
யொன்றளித்தித் துகளில் சீர்த்திக்
கொன்னுறுசுப் பிரமணியக் குரிசில்ச்சிட்
டுபகரித்தான் குவல யார்க்கோ.

---

சித்தாந்தம் பத்திராசிரியர் அஷ்டாவதானம் பூவை,

சிவஸ்ரீ, கலியாணசுந்தர யதீந்திரர்

அவர்களியற்றிய - விருத்தம்.

கவிச்சக்ர வர்த்தியெனுங் கம்பன்முன்
னூலதனிற் கழறி வைத்த
கவினிறையுஞ் சிலையெழுப தெனுநூலுக்
கோருரையைக் கனிவ தாகப்
புவிமகிழ்பே ழைக்குடிவாழ் துரைசாமி
நாயகநற் புலவன் றீட்ட
அவிரச்சி லேற்றியுத வினன்சுப்ர
மணியனெனு மறிஞ ரேறே.

---

திருவோத்தூர் திருநாவுக்கரசு மடம்

மஹாவித்வான் முத்தமிழ்ரத்னாகரர்

சைவஸ்ரீ, ம. தி. பானுகவியவர்கள்

இயற்றிய,

எழுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

தேவரும்புகழு மாண்புளார் கம்பர்
சிலையெழு பஃதென வனியர்
மேவரும் புகழை விளக்கின ரதனுண்
மேவிய பொருண்முறை யனைத்து
மேவரு முணரப் பேழையங் குடிவா
ழெழிற்றுரை சாமிநா யகப்பேர்க்
காவருங் காத்தா னுரையிட வதனைக்
கைத்தலத் தேவரு மேந்த.

அச்சுவா கனத்தி லமைத்துயர் முறையா
யாக்கின னரசரும் பிறரு
நச்சுவா கதத்தி னேற்றிடும் குணத்தா
நல்லெழின் மதனினுஞ் சிறந்தோன்
மெச்சுவா கதத்தின் மாறிலாப் புகழான்
மிகுதிறல் வன்னியர் திலகன்
எச்சுவா கசமுந் தருவனி மித்திர
னிலங்கிடப் புரிதரு வள்ளல்.

சூரனை வதைத்த வீரவே லுடைய
சுப்பிர மணியநற் பெயரை
யாரநல் லதிட்டம் பெறுபுக ழாள
னருந்தமிழ்க் கலைமகட் புணர்வாற்
சீரிய பன்னூன் மகாருட னிலங்குஞ்
சிறப்பின னிவன்புக ழென்றுந்
தாரணி யுள்ள நாளள வினுமே
தணிவற விளங்குக மாதோ.

---

சென்னை ஹிந்துதியலாஜிகல் ஹைஸ்கூல் தமிழ்ப்
பண்டிதரும், லோகோபகாரி பத்திராதிபரும்
வேதாந்த வித்வசிரோமணியுமாகிய
ஸ்ரீமத். கோ. வடிவேலு செட்டியார்
அவர்கள் இயற்றிய,
அறுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்.

திண்மையமை வன்னியர்மேற் றிட்பநுட்பஞ்
செறிந்தழகு செவ்வே தோன்ற
வண்மையெலாம் பெறுகம்பர் வகுத்தசிலை
யெழுபதிற்கு வளப்ப மாகத்

தண்மைநிறைந் திடும்பேழைக் குடிவாழுந்
துரைசாமி தக்கோ ரேற்க
ஒண்மையாப் பன்னூலாய்ந் துரையெழுதி
யுலாவச்சி ருற்றான் மாதோ.

---

சென்னை துரைத்தன மாதர்கலாசாலைத் தமிழ்ப்பண்டிதர்
ம-ா-ா-ஸ்ரீ. கா. நமச்சிவாய முதலியார்
அவர்கள் பாடிய வெண்பா.

கலைமகளைக் கண்கண்ட கம்ப னளித்த
சிலையெழுப திக்குரையைச் செய்தான்—கலைதேர்
உரைசாமி யென்ன உலகோ ருரைப்பத்
துரைசாமி யாம்புலவன் சூழ்ந்து.

---

சென்னை காமைசில்காலேஜ் தலைவர் ம-ா-ா-ஸ்ரீ,
M. S. பூர்ணலிங்கம் பிள்ளை, பி. எ. எல். டி.,
அவர்கள்

அபிப்பிராயம்.

சிலை எழுபது என்ற அருமையான நூலும் உரையும் பார்த்தேன். உரை பழைய வுரைகளைப் போன்று நன்னடையில் ஆழ்ந்த கருத்துக்களைத் தெள்ளிதில் விளக்குகின்றது. முகவுரையில் கம்பருடைய காலநிர்ணயம் கூடியவரை சரியாகச் செய்யப்பட்டிருக்கிறது. வன்னியர்குல மகிமையை விளக்குவதுடன் பொதுநீதியும் பற்பல விடங்களில் போதிக்கப் பட்டிருப்பதைக் காணலாம். உரையில் எடுத்துக்காட்டியுள்ள மேற்கோள்கள் அருமையுள்ளன; பாராட்டத்

தக்கன. இதைப்பதிப்பித்த நாயகரவர்களின் அரிய உழைப்பை எவரும் நன்குமதிப்ப ரென்பதில் ஐயமில்லை. அடுத்தபதிப்பில் நூல்தனியாகவும் உரை பின்பாகமாகவும் பிழையின்றிபிரசுரஞ் செய்யப்படவேண்டுமென்ற என் அபிப்பிராயத்தை இவண் தந்துளேன்.

---

சென்னை பச்சையப்பன் கலாசாலைத்
தமிழ்ப்பண்டிதர் ம-ா-ா-ஸ்ரீ,
கா. ர. கோவிந்தராஜ முதலியாரவர்கள்
இயற்றிய
அறுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்.

ஏரார் கம்ப நாடரெனும்
பெரிய ரளித்த நற்றமிழின்
வாரார் பொருளேய் சிலையெழுப
தென்னு நூலி னுட்பொருளைப்
பாரோ ருணர்ந்து மன்களிக்கப்
பரிவார் வன்னி குலமன்னர்
சீரார் பெருமை யுலகறியச்
சிறந்த வுரைதான் வகுத்தனனால்.

ஏழைக் குடியாங் கிலையென்ன
வேந்து செங்கோல் வன்னியர்தம்
ஆழிக் கிணையாங் குலமதனி
லழகார் மணியி னிலிர்ந்திதித்தோன்
பேழைக் குடியான் கலைநலந்தேர்
பிறங்கு மறிஞன் றுரைசாமி
வாழி வளஞ்சா ரிவ்வுரையை
வாய்ந்த புலவோர் களிப்பாரே.

---

மதுரைத் தமிழ்ச்சங்கத்து வித்துவான்
செங்கல்பட்டு ம-௱-௱-ஶ்ரீ,
அரங்கசாமி நாயகரவர்கள் இயற்றிய
விருத்தம்.

முக்குலமன் னரில்முதன்மை பெற்றிடுவன்
னியர்புகழ்ச்சி முழுது மன்ன
இக்குமொழிக் கம்பன்செய் சிலையெழுப
தெனுநூலுக் கிசைவ தாகத்
தக்கவுரை யியற்றினன்பே ழைக்குடிநந்
துரைசாமித் தமிழ்நா வல்லோன்
மிக்கவச்சி லதைப்பதித்துச் சுப்ரமண்யக்
குரிசிலிசை மேவி னானால்.

---

ஸ்ரீ கிருஷ்ண சைதன்னிய கிரந்தகர்த்தாவும், இராமநிலய
விவேகானந்த அச்சுக்கூடத்தலைவருமாகிய ஸ்ரீமாந்,
T. பக்தவத்சலம் பிள்ளை பி. எ ; M. B. P. I.
அவர்கள் இயற்றிய விருத்தம்.

சிலையெழுப தெனுநூற்குச் சீருரையொன் றியற்றினனால்
மலையெழுநல் விளக்கென்ன நாதுரைசா மிப்பெரியோன்
கலையெழுநுண் பொருளிதனைக் காசினியோர் தாமறிய
விலையெழுதற் புத்தகமாய் வித்தகசுப் பிரமணியன்.

வீறுபுகழ் நிலத்தோங்க வீணரெல்லாம் பெயர்நிலவ
மாறுபடு மறக்கொள்கை யூறுபட வண்டமிழி
னேறுபடு நன்னிலைமை யிசைந்தொளிர வச்சியற்றி
ஆறுபடு மேலொழுக்க மறைவித்தா னற்புதனே.

---

ம-ள-ஸ்ரீ

## வ. சு. செங்கல்வராயப்பிள்ளை எம். ஏ.,

அவர்களால் இயற்றப்பட்ட

### சந்த விருத்தம்.

கலைவல கவிமுத னுரைமுழு வதுநாடிச்
சொலவல பெரியவர் துதிபெறு துரைசாமி
சிலையெழு பதினுரை யெழுதிய திறமீதே
இலையிரு ளெனஎழு பரிதியி னிபனேரும்.

---

கோமளேசுவரன் பேட்டை ம-ள-ஸ்ரீ, வித்வான்

## ம. இராஜகோபால பிள்ளை அவர்கள்

இயற்றிய

### அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

வரம்பிசைக்கேந் தியதெய்வ மாண்புலமை
வளர்கம்பர் மகிழ்வி னேங்கிச்
சிரம்பிசைக்கேந் தியதேவிற் செறுநர்வலி
தெறுங்கனலித் திருக்கு லத்தார்
நிறம்பிசைக்கேந் திடவுதவு நெடியசிலை
யெழுபதிற்கு நெறிவ ழாது
பரம்பிசைக்கேள் விபர்வியக்கப் பருவுரையொன்
றியற்றினனுற் பாரீர் பாரீர்.

உரைசாரு மொழுங்கினறு மிஃதளித்த வுத்தமன்பே
ருரைப்பக் கேளீர்
வரைசாருந் தீபிகையில் வளம்படைத்து மதியாளன்
மருவும் பேழைத்
துரைசாமி யெனுநாமன் றொல்லுலகி லச்சிட்டுத்
துலங்க வைத்தோன்
பரைசாரும் பாகத்தாற் குகப்புறுசுப் பிரபணிய
பாவல் லோனே.

---

ஓமலூர்தாலூக்கா தோரமங்கலம் கர்ணம் ம-ா-ா-ஸ்ரீ

## வித்வான். அ. வரதநஞ்சையப் பிள்ளை

அவர்கள் இயற்றிய விருத்தம்.

புவிக்கணியா யான்றபொருள் பயக்குநல்லோர்
கவியென்று புகன்று காட்டும்
கவிச்சக்ர வர்த்தியாங் கம்பனது
தமிழ்மணக்குங் கனிவா யானே
செவிக்கினிமை பெறவமைத்த தெள்ளமுதாம்
சிலையெழுப தென்னு மிந்நூல்
உவக்கமுன முபகாருணா கரச்சோழ
னவையினிடை யுரைத்த தாமால்.

பாட்டொன்றுக் காயிரம்பொன் பரிசுபெற்று
வன்னியராம் பாரா ள் மன்னர்
தோட்டுன்று நெடுஞ்சிலையின் பெருவீரம்
புகலுமிந்நூல் சுசனர்க் கெல்லாங்
காட்டொன்று நல்வழியில் மீட்கவென
வுரைதீட்டிக் கடமை செய்தான்
பாட்டளிசேர் பொழிற்பேழைக் குடித்துரைசா
மிப்பெயர்கொள் பாவலோனே.

அன்னதனைத் தன்னதச்சு விமானமிசை
யேற்றியுல கனைத்து மேற்றும்
வன்னிகுல மித்திரன்பத் ராதிபனுஞ்
சுப்ரமண்ய வள்ளல் செய்த
மன்னுமுப காரமிதற் கென்னேகைம்
மாறென்று வானை நோக்கி
யுன்னுவதல் லாற்பிறிதென் னன்னவர்தம்
வழிசிறப்புற் றோங்க வென்றே.

---

விஷ்ணுபாத சேகரனென்னும் ம-ா-ா-ஸ்ரீ,

வித்வான் ஜா. பசுபதி நாயகரவர்கள்

இயற்றிய

நேரிசை வெண்பா.

வாழையிளந் தாருடைய மந்திகள்பாய்ந் தாங்கயலேய்
தாழையிள நீர்குடித்துத் தண்டலைசேர்—பேழைநகர்
நங்கள்துரை சாமிமால் நற்செயலொன் றோதுகிறேன்
இங்கெவருங் கேட்டுணரு யான்.

இம்பர் தனிப்புரந்த ஏற்றமிகும் வன்னியர்க்கோர்
கம்ப ரெனும்பெரியர் கண்டளித்த—செம்பொற்
சிலையெழுப தாநூற்குத் தெள்ளுரைசெய் தீந்தான்
இலைநிகரென் றோத இவன்.

அத்தகைய நூலதனை யச்சிட்டான் வன்னிகுல
மித்திரனை யெங்கெங்கும் மேவிவர—வைத்துளனும்
நற்சுப் பிரமணிய நாயகன்றான் வாழுகின்ற
இற்குயப் பேட்டை யெனல்.

---

ஸதாவதானம், யாழ்ப்பாணம்,

ஸ்ரீமான். நா. கதிரைவேற்பிள்ளை யவர்கள்

மாணாக்கர் ம-ா-ா-ஸ்ரீ,

புரசை, மு. பாலசுந்தர நாயகர் அவர்கள்

இயற்றிய விருத்தம்.

முத்தீயின் வழிவந்த முக்குலத்தா ராயவன்னி
முதல்வர் சீர்த்தி
பத்தேழு பாவினத்தாற் சிலையெழுப தெனுநூலைப்
பரிவி னாலே

பித்தேறிப் பிதற்றுநர்நா வடங்கியிடப் பெருப்புல
கப்பன் மென்மேல் [மைக்
சத்துரா வியற்றினதற் கோருரைதா னிஞ்ஞான்று
சாற்றி னனல்

அன்னவன்யா ரென்புழிஇ யரியகலை நனிதெரிந்தா
னறிவோர் சாற்றும்
மன்னவர்பே ழைக்குடிவாழ் துரைசாமிப் பெயரு
டையப இன்று [டைய
வன்னிகுல மித்திரன்பத் திராதிபனுஞ் சுப்பிரமண்ய
நாய்க னச்சில்
முன்னுறவைத் தேவிடுத்தா னவைகாணவுளமகிழ்ந்தே
மூலருக் காமால்.

---

சென்னை கலியுகவர்த்தமானி பத்திராதிபர்

**ஸ்ரீமத் கந்தஸாமி பிள்ளை மாணாக்கரி லோருவரும்,**

இலவை. ஜோதிட வைத்திய சித்தாந்தி

**ஸ்ரீமத் சங்காலிங்கம் பிள்ளை குமாரரும்,**

தென்காசி ஸ்ரீராமாநுஜம் பிரஸ் மானேஜருமான,

ஸ்ரீமான், E. S. சிவராமலிங்கம் பிள்ளை

அவர்கள் இற்றிய,

அறுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்.

பதியுறைவோர் புறவிழிப்பா லவர்தன்குறை
தீர்க்கமலர்ப் பதியன் றெய்வு
நிதியெனவே முகற்படைத்த நிருபர்வன்னி
குலக்கருமபின் நிறையைக் கம்பன்
துதியுளசெஞ் சிலையெழுப தென்க்கவிசற்
கரைவட்டாய்த் தொகுத்தான் யார்க்கு
பதியுளநற் றுரைசாமி வள்ளலுனை
வெனும்பாகாய் வழங்கி னனல்.

---

மதுரைத் தமிழ்ச்சங்க வித்வான்
காங்கயம் - அஷ்டாவதானம், ம-ா-ா-ஸ்ரீ,
சிட்டா, V. சேஷாசல நாயுடு அவர்கள்
இயற்றிய விருத்தம்.

மணிசேர்மகுட மன்னவர்கள் வணங்குங் கம்புநாடர்மிக
அணிசேர்ஒவ்வோர் கவிக்குமொவ்வோ ராயிரம்பொன்பரிசுட
திணிசேர்நரவாகனமடைந்து திகழுங்கருணைகரவணியன் [னே
பணிசேர்அவையிலரங்கேற்றம் பண்ணும்செம்பொற்சிலைகவி
[க்கு
வாழைக்குடிகள்நறுந்தேறல் மணித்தாலடைந்து தங்கணிற
மாழைக்குடியராஞ்சுரும்பர் மாநதிமுரலுஞ் சோலையடர்
ஏழைக்குடிகளில்லாம லெங்குமணிமா ளிகைசூழும்
பேழைக்குடிவாழ் கலைவல்லான் பிறங்குந்துரைசா மிப்பெய
[ரான்
கலைஞர்மதிக்குமேற்கோள்கள் காட்டிவிரிவாயோருரையைத்
தலைமையெனவே தந்தருளத் தழைவன்னிகுலமித்திரனை
உலகிலீன்றபேரிசையா றுசிதசுப்ர மண்ணியவேள்
நிலவவச்சிற்பிரசுரித்து நேர்ந்தாணியாவும் தேர்ந்தானே.

---

கோயமுத்தூர் வித்வான் ம-ா-ா-ஸ்ரீ
கந்தசாமி முதலியார் அவர்கள் குமாரரும்,
பண்டிதர் ச. திருச்சிற்றம்பலம் பிள்ளை அவர்கள்மாணாக்கரும்
டிஸ்ட்ரிக்ட்கோர்ட்டு வக்கீலுமாகிய ஸ்ரீமான்
C. K. சுப்பிரமண்ணிய முதலியாரவர்கள், பி. ஏ.
இயற்றிய
அறுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்.

வன்னிகுல பூபதிகள் மேற்கம்பர் திருவாக்காய்
வையம் போற்று
மன்னுசிலை யெழுபதெனும் மாக்கவியைத் துரைசாமி
மகிபன் செய்யும்

பன்னுதெளி வுரையுடனே யுச்சியற்றிக் குலஃவளரும்
பண்பு செய்து
நன்னயவான் சுப்ரமண்ய நாயகவேள் நிலவுபுகழ்
நலம் பெற்றானே.

போர்வேந்தர் படைச்சிறப்பு முலகமெலா மதனாலே
புகழ்பெற் றோங்கி
ஏர்பெறவே தழைத்துயரு மியல்பெல்லா மோவ்வொ
யியம்பு மிந்நூல் [ன்று
பார்பெறவே யுலகினர்க்கு விளக்கியுப கரித்ததுவும்
பண்பா விந்த
பேர்பரவு மிருவர்களு மழியாத புகழ் பெற்று
பிறங்கு வாரே.

---

சென்னை இராயப்பேட்டை,
வெஸ்லிகாலேஜ் தர்க்கபோதகர் ம-ா-ா-ஸ்ரீ
S. சச்சிதாநந்தம்பிள்ளை பி. ஏ. எல். டி,
அவர்களால் கொடுக்கப்பட்ட
அபிப்பிராயம்.

சிலை யெழுபது என்னும் இந்நூல் முற்காலத்துத் தமிழகத்தில் அரசுபுரிந்த அக்கினிகுல மன்னர்களது அரசியலின் உறுப்புகளைப் பெரிதும் புகழ்ந்து கூறுவதாகும். இதனைஇயற்றினோர் கம்பநாடர் என்று இதிற் காணக் கிடக்கின்றது. இந்நூலின் முகவுரையில் கம்பரது கால வரையறையைப் பற்றி ம-ா-ா-ஸ்ரீ, ஆ. சுப்பிரமணியநாயகர் அவர்கள் எழுதியுள்ள விஷயங்கள் நம்மனோர் நன்மதிப்பிற் குரியன. இதற்கு வரையப்பட்டுள்ள உரையும் சாலச் சிறப்புடையதே.

---

திருச்சி எஸ். பி. ஜி. காலேஜ் தமிழ்ப்பண்டிதரும்,
"செந்தமிழ்ச்செல்வம்" பத்திராதிபருமாகிய

ம-ா-ா-ஸ்ரீ, அ. சுந்தரநாதம் பிள்ளை.

அவர்கள் இயற்றிய.

அறுசீர் ஆசிரிய விருத்தம்.

முந்துநான் மறைகட் கெட்டா முழுமுதல்
வழுதி நாட்டில்
வந்துதா னமர்ந்து சங்கம் வளர்தா
வமைய வாய்ந்த
நந்துறுத் தமிழில் வல்ல நயதிருக்
கம்ப நாடன்
சிந்துறு துரைத்தா னேங்குஞ் சிலையெழு
பதாநன் னூலே.

சிலையெழு பதினே மன்னர் திருக்குலத்
தவரே யாகும்
நிலையுறு வன்னி யர்தம் நிறைபுகழ்
விளங்கு மாலோ
உலைவறு மதனுட் சொற்ற வுயர்பொரு
ளனைத்து மாய்ந்து
கலைவலர் களிக்கச் செய்தான் கருதுரை
யொருவ னம்மா.

அன்னவன் யாரே யென்னி லரசவர்
குலத்தில் வந்த
மன்னிய குணத்து மிக்கான் மகிழ்தமிழ்க்
கலையில் வல்லான்
கொன்னுயர் செல்வப் பேழைக் குடியினில்
வாழுங் கோமான்
தன்னயத் துரைசா மிப்பேர் நாயக
னாகு மாதோ.

இத்தனி நூலின் சீரு மெழிலுரை
வளமுங் கண்டு
சித்தமன் களியே பொங்கச் செவ்விய
அச்சி லேற்றி
இத்தரை முழுது நாளு மினிதினி
னுலாவச் செய்தான்
நத்துசுப் பிரமண் யப்பேர் நாயகன்
நலத்தாற் றானே.

---

திருவெண்ணெய்நல்லூர்,

ஸ்ரீ கம்பர் கலாமிர்த சங்க காரியதரிசி

ஸ்ரீமான், தி. வடிவேலுமுதலியா ரவர்கள்

இயற்றிய விருத்தம்.

கலைவளர்க்குங் கவிபுனைந்த கம்பநாட்
டடிகள்புவி காவலோர் தஞ்
சிலைவளைக்கும் பெருமைதனைச் சிலையெழுப
தெனுநூலாற் சிறக்கச் சொற்று
மலைவளைக்கும் புவனியுளோ ரறியவுரை
விரித்துரைத்தா னழகாய்த் தெங்கு
குலைபழுக்கும் பேழைகுடி துரைசாமி
நாயகனுங் குணவா னம்மா.

அப்பெரிய காவியத்திற் கருகரா
மனற்குலத்தோ ரவாவின் வண்ண
மெப்புலவ ருங்கண்டு கும்பனுரை
யிதுவோவென் றேத் தெடுப்ப
சுப்பிரம ணியக்குரிசிற் செப்பமுட
னச்சிட்டுத் துலங்க வைத்தா
னிப்புவியோர் செந்தமிழி னின்பநலந்
துய்ப்பரென விசைவு கொண்டே.

---

காரைக்கால், சாஸ்திரி ஆராய்ச்சி ம-ா-ா-ஸ்ரீ,

V. குருசாமி படையாக்ஷியாரவர்கள்

இயற்றிய வெண்பா.

கற்ருேறிற் கம்பனென்போன் காசினியி ஞனுகையை
யுற்ருேர்க்குச் செஞ்சிலேயை யோதினன்—மற்றுந்
துரைசாமி நாவலனுஞ் சொன்ன னுரையுங்
குருசாமி யுள்ளங் கொள.

---

மதுரைஜில்லா சேம்பூர் வித்வான் ம-ா-ா-ஸ்ரீ,

வீ. ஆறுமுகஞ்சேர்வை யவர்களியற்றிய

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

வன்னியரின் புகழ்விளங்கப் புலவர்சிகா
மணிகம்பன் மகிழ்மிக் கோங்கி
முன்னுஞற்றி வைத்தசிலே யெழுபதெனும்
பநுவல்தனே முழுது மோர்ந்து
மன்னுதிரு மிகுபேழைக் குடிவாழுந்
துரைசாமி மதியில் வல்லோன்
நனனலஞ்சா னுரைவகுத்து நாவலின்
புறவளித்தா னதனே நாளும்.

மண்டலத்திற் சிறந்ததமிழ் நாட்டிலுள்ளா
ராய்ந்துபொருள் வளங்க ளெல்லாங்
கொண்டுவகைக் கடல்குளித்தின் புறவன்னி
குலமித்திர னதிப னுன
தண்டமிழ்ச்சுப் பிரமணிய நாயகனு
மிசையுடையான் தகுதி யாக
விண்டலத்தோர் வியக்குமச்சிற் பதித்துதவி
மிகுகீர்த்தி மேவி னுனல்.

---

கோயமுத்தூர் லண்டன் மிஷன் ஹைஸ்கூல்

தமிழ்ப்பண்டிதர் ம-ள-ள-ஸ்ரீ,

## C. S. சொக்கலிங்கம் பிள்ளை அவர்கள்

இயற்றிய,

கொச்சகக் கலிப்பா.

வன்னியபூ பதிகளின்மேன் மகாகவியாங் கம்பர்செய்த
விண்ணிசைசேர்சிலையெழுப தெனுநூற்கோ ரினியவுரை
நன்றுறச் செய்தளித்தா னிலமெ லாம்புகழும்
மன்னுபே ழைக்குடியில் வந்ததுரை சாமியென்போன்.

அந்தவுரை யினையவனி யதனிலுள மக்களெலா
முந்துமன்பொ டினிதோதி யுணர்வடைத லேகருதிச்
சந்தமுற வச்சேற்றித் தாரணியிற் பிரசுரித்தான்
சந்ததம்க்ஷத் திரியகுலஞ் சாரபிமா னந்தரித்தான்;

வன்னிகுல மித்திரனும் மாண்புபெறு பத்திரிகை
சென்னையினி னடாத்திவரு செந்தமிழ்மீ தார்வமுளான்
என்னனைய நண்பர்கள்பா லென்றென்று மாறாது
மன்னியிடும் விசுவாசன் வறியவர்கட் குயர்போசன்;

கங்கைநதி சடைக்கரந்த கண்ணுதலார்க் கெழிற்றுசன்
சங்கைபெறு மதிஞர்கட்குச் சாதுரிய முறுநேசன்
மங்குதலில் புகழ்ச்சுப்ர மணியநா யகனென்னு
மங்கிகுலத் தோன்றலென வனைவருஞ்சொல் தூயவனே.

மதுரைத் தமிழ்ச்சங்கத்து வித்துவானும்,
கோயம்புத்தூர் கலாசாலைத் தமிழ்ப்பண்டிதருமாகிய
ம-ா-ா-ஸ்ரீ, அ. கந்தசாமிப் பிள்ளை
அவர்கள் இயற்றிய விருத்தம்.

நமது செந்தமிழில் அளவினுற் பெயர்கொள்
நயப்புறு நூல்களி லொன்றாய்
அமைவுறும் சுவைசால் சிலைபெழு பஃதென்
றரைந்திடும் அரிய நூல் தன்னை
யெமைநிகர் வாரும் எளிதினி லுணர
வியற்றின னல்லுரை யன்னோன்
கமைமுதற் குணங்கட் கிருப்பிட மாய
கனதுரை சாமிநா யகனே.

அத்தகு நூலை யச்சினி லேற்றி
யாவர்க்கும் பெரிதுப கரித்தான்
உத்தமன் சுப்ர மண்யனென் றுரைக்கும்
உயர்குணன் வன்னியர் குலத்து
மித்திர னென்னும் பத்திரா திபனாய்
விளங்குவோன் கோவைமா நகர்வாழ்
வித்தகன் பழனி யப்பபூ பதியாம்
மேதகைக் கேய்ந்த நண்பினனால்.

---

கோயமுத்தூர் பள்ளபாளையம்
மாணவர் தமிழ்ச்சங்கஸ்தாபகரும் போதகாசிரியருமாகிய
ம-ா-ா-ஸ்ரீ N. வையாபுரி பிள்ளையவர்கள்
இயற்றிய விருத்தம்.

வன்னியபூ பதிகள்குல மிகவிளங்க வளம்பெறுநற்
கவியாற் கம்பன்
பன்னுசிலை யெழுபதினுக் கழகுமிகுந் தெளிவுரையைப்
பாரோர் மெச்சும்

நன்னயஞ்சால் துரைசாமி நாயகனன் பானியற்றி
நல்கி நன்கு
தன்னுறும்பே ழைக்குடிக்கோர் பெருபுகழ்தந் தான்
சால நன்றே. [காண்பீர்

அன்னதொரு நூலினைநன் றெனவறிஞர் கண்டேத்த
வழகான் மேவுஞ்
சென்னைவேப் பேரிமது கரவிலா சப்பிரசிற்
சேர்த்து நாளும்
வன்னிகுல மித்திரன்பத் திரவதிப னெனும்பெயரை
வழங்கப் பெற்றே
மன் னுறுமா சுப்ரமண்ய நாயகன்றந் தானுலகோர்
மகிழ மாதோ.

---

கோயமுத்தூர் டவுன் பள்ளபாளயம்
மாணவர் தமிழ்ச்சங்கத்தின் காரியதரிசியாகிய,
ம-ா-ா-ஸ்ரீ, S. சுவாமிநாத முதலியார்
அவர்கள் இயற்றிய,

வெண்பா.

சீர்மணக்கும் பேற்றுனெஞ் செல்வக் கவிகம்பன்
நார்மணக்கும் வன்னிகுல நன்குறவே—தார்மணக்கப்
பூட்டுஞ் சிலையெழுப தென்றெருநூற் பொற்பேற
நாட்டினு னிவ்வுலகில் நன்கு.

உவந்தளித்த விந்நூ லுக் கோருரையை வன்னி
குலந்தழைப்பச் செய்தளிப்பீரென்னத்--தவந்தவமென்
ருர்க்குந் துரைசாமி யாய்ந்துரையைத் தந்துலகோர்
பார்க்கும் படிபுரிந்தான் பார்.

பரிந்துரைத்த விந்நூலின் பண்புரையைப் பாரில்
விருந்தளிப்பான் வேண்டியே யச்சில்—அருந்தமிழோர்
பார்க்கப் புரிந்ததனுற் பண்புறுமா சுப்ரமண்யன்
பார்க்குள் உயர்ந்தான் பரிந்து.

---

கோவை அக்நிகுலக்ஷத்ரிய ஜில்லாசங்க காரியதரிசி
ம-ள-ள-ஸ்ரீ, R. பூபதிபழனியப்ப நாயகர்
அவர்கள் இயற்றிய விருத்தம்.

புலவர்புகழ் கலிங்கத்துப் பரணியினுன் ஜயங்கொண் [டான்
புகழப் பெற்ற
அலகிலறி ஞன்கருணு காத்தொண்ட மான்சபையி
லன்று கம்பன்
இலகவுரை சிலையெழுப தெனுநூலை யரங்கேற்றி
யின்சீர் பெற்ருன்
நிலவுலகி லின்னு லுக் குறைதந்தான் துரைசாமி
நேயன் மாதோ.

வெண்பா.

உத்தம குலோத்துங்க சோழன் சரிதையுடன்
வித்தகமா யச்சில் விரைந்தேற்றி—மெச்சும்
சிலையெழுப தாகநஞ் சுப்ரமண்யன் தந்தான்
உலகினிலுள் ளோர்களிப்ப வோர்ந்து.



உ

கடவுள் துணை.

# சிலையெழுபது.

சிலையெழுப தென்பது: சிலையை எழுபது செய்யுளாற் கூறுவது என இரண்டாம் வேற்றுமைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகையாய் இந்நூற்குக் காரணக்குறி யாயிற்று. சிலையென்னும் பல பொருளொருசொல் இங்கே வில்லை யுணர்த்தி நின்றது. உணர்த்தவே முடி, கொடி, குடைமுதலிய மற்றைய வங்கங்களையும் பெறுமென்ப தென்னை? "ஒருமொழி யொழிதன் னினங்கொளற் குரித்தே" என்றதனாலறிக. * இதனாற் புலப்படுவ தியாதெனின், அதற் குரிய வருணத்தை விளக்கும்; அது க்ஷத்திரிய வருணமென்க. அவ் வருணத்திற் கிஃ துரித் தென்ப தென்னை? தொல்காப்பியம் பொருளதிகாரம் மரபியல் "படையுங் கொடியுங் குடையு முரசும் - நடைநவில் புரவியுங் களிறுந் தேரும் - தாரு முடியு நேர்வன பிறவுந் - தெரிவு கொள் செங்கோ லரசர்க் குரிய" என்னும் ௭௧-வது சூத்திரத்தாலும். "வில்லும் வேலுங் கழலுங் கண்ணியுந் - தாரு மாரமுந் தேரும் வாளு - மன்பெறு மரபி னேனோர்க்கு முரிய" என்

---

* உதாரணம். சோற்றையுண்டா னெனவே, கறிமுதலியவற்றையும், பாக்கைத்தின்றா னெனவே, வெற்றிலை சுண்ணம்பு முதலியவற்றையுங் காட்டு மாறுபோல, வில்லைக் கூறவே மற்றைய முடி, கொடி, குடைமுதலிய அங்கங்களையுங் காட்டிய தென்க.

னும் ௮௩-வது, சூத்திரத்தானும், "(அன்ன ராயினு மிழிந்தோர்க் கில்லை" என்னும் ௮௪-வது சூத்திரத்தானு) மறிக. (வில்லி யென்பதனால், வேடர் விற்பெற வில்லையோ வெனின்? பெறினும் அதனால் விஜயத்தைப் பெற்று, மற்றையவங் கங்களோடும் உலகத்தைக் காத்த லவர்கட் கில்லையென மறுக்க.) "முடி முதலிய சிறந்த வுறுப்புகளிருக்க வில்லைக்கூறுவதென்னையோ வெனின்? (நன்று கூறினாய்) க்ஷத்திரியர்களது பிறப்பிடம் பிரமாவின்றோள் அந்த க்ஷத்திரியர்களது தோள் சம்பந்தமாகிய கையினிடமிருந்து அத்தோட்கும் அவர்கட்கும் விஜயத்தையுங் கீர்த்தியையுங் கொடுக்க அதனால் மற்றையவங்கங்களையும் அடைகிறபடியால்*. வில்லையே கூறலாயிற்று. எழுபதென்பது எண்களின் றொகுதி; செய்யுட்டொகையை யுணர்த்தியது. இந்நூல்செய்ததெதன் பொருட் டெனில்? பரிசுபெறற் பொருட் டென்க. இப்படி நூல்செய்தற்கு விதியாதெனின்? முற்கூறிய தொல்காப்பியம், பொருளதிகாரம் புறத்திணை யியல் கொடுப்போ ரேத்திக் கொடாஅர் பழித்தலு - மடுத்தூர்ந் தேத்திய வியன்மொழி வாழ்த்துஞ் - சேய்வரல் வருத்தம் வீட வாயில் - காவலர்க் குரைத்த கடைநிலை

* படைக்கலம் பயிறலில் விற்றொழில் சிறந்தது. அப்படி ஆசர்களுக்குரிய தொழில்களி லொன்றாகிய படைக்கலம் பயிறலில் விற்றொழிலே சிறந்த தென்பதை மகாபாரதம் சாந்தி பருவம் வீட்டு மனைக்கண்ட சருக்கம் "சுரு மாமகம் பயிலுதல் சிலைமறை தொடர்தல் - விருதி னோடொற் படைகளு மளிக்குதன் மேவார்ப்-பொருத ழித்தனல் லுயிர்களைப் பொதுமையிற் புரத்தல்-இருநி திக்குழா மீதன் மன்னவர்குல வியல்பே "என்னும் ௩௩-வது கவியில் சிலைமறை தொடர்தல்' என்றதனாலும் ஸ்மிருதி யாதிகளாலுமறிக.

யானுங்-கண்படை கண்ணிய கண்படை நிலையுங்-கபிலை கண்ணிய வேள்வி நிலையும்—வேலி, னோக்கி விளக்கு நிலையும் - வாயுரை வாழ்த்துஞ் செவிய றிவூஉம்-ஆவை யின் வரூஉம் புறநிலை வாழ்த்துங்-கைக்கிளை வகையோ டுளப்படத் தொகைஇ-தொக்க நான்கு முளவென மொழிப" என்னும் ௩௫-வது சூத்திரத்தில் இது "அடுத் தூர்ந் தேத்திய வியன் மொழி வாழ்த்து." அதாவது தலைவன் எதிர்சென்று அவன் செய்தியையும், அவன் குலத்தோர் செய்தியையும்ஏற்றி, முன்னிலை படர்க்கை யென்னும் இரண்டிடத்தினுள் ஒன்றுறைப் புகழும்இயன் மொழி வாழ்த்து; அவற்றில் இது படர்க்கையிற் புகழ்ந்த வியன் மொழிவாழ்த் தெனவறிக. சிலையெழு பதென்பதற்குப் பரிசுபெறுவா ரொருவன் அப்பரிசு பெறு வண்ணம்ஈவான் முற்சென்று அவனையும், அவன் குலத்தோரையும், அவன் குலத்துக்குரிய வில் முதலிய அங்கங்களை எழுபது செய்யுளாலேற்றிப் படர்க்கையிற் புகழ்ந்த இயன்மொழி வாழ்த்தாகிய நூலெனப் பொருள் கூறுக. *

பாடினோனை பாயிரம். ௨-வது கவியினும் நூல் ௧௭-வது கவியினும், ஈந்தோனை நூல் ௬௪-வது கவியி னும் காண்க.

---

* க்ஷத்திரிய வருணமென்னும் முதற் பொருட்கு வில்முத லியவைகள் சினைப்பொருள். சினைகளிலாத முதலும் முத லிலாத சினைகளும் இல்லை; யாதலால் சினைப் பொருள் களைக் கூறலே முதலை ஆயது. இதை தொல்காப்பியஞ் சொல்லதிகாரம் வேற்றுமையியல் "முதலுஞ் சினையும் பொ ருள் வேறுபடா அ-நுவலுங்காலை சொற்குறிப்பினவே" என் னும் ௬-வது சூத்திரத்தாற் காண்க.

இப்பிரபந்தம் பாயிரம், நூல் ஆகிய இரண்டனுள் "தெய்வ வணக்கமுஞ் செய்பொருட் டொகையும்" செப்புதலால் பாயிரஞ் சிறத்தலின் பாயிரத்தைக் கடவுள் வணக்கம், குலவுற்பவம, குலமாக்ஷிமை முதலியவற்றுடன்கூறி அக்குலமாக்ஷிமை யானது படை, குடி, கூழ், அமைச்சு, நட்பு, அரண் ஆகிய ஆறு உறுப்பினைக் கொண்ட அரசியலாதலின்; அவ்வாறனுள் படை அரண் இவ்விரண்டும் முன்னும் மற்றைய நான்கும் அரசுறுப்பிலாக அரசனைப் பின்னும், அவை நிலைபயப்பத் துதித்தலாகிய வாழ்த்தை ஈற்றினும் வைத்து, முறையே நூலை படை, அரண், அரசு, வாழ்த்து, என நான்கு உறுப்பினதாகக் கூறி யிருக்கிறார் எனவறிக.

அரசியலா றென்பதை. திவாகரம்-௧௨-வது பல்பெயர் கூட்டத்தொரு பெயர்த் தொகுதி "படையுங் குடியுங் கூழு மமைச்சு-மரணு நட்பு மரசியலாறே" என்னும் ௮௬-வது சூத்திரத்தா னுணர்க; நாயனாரும். 'படைகுடி கூழமைச்சு நட்பர ணாறு=முடையா னரசருளேறு." என்றாரென்க. சிலை-ஆகுபெயர்.

இந்நூல் சரஸ்வதி அநுக்கிரகம் பெற்ற மஹான் வாக்காதலின் அதற்கு சிற்றறிவுடைய என்னால் எழுதிய உரையில் வழுவிருப்பின் மூதறிவோர் யாவரும் ஆய்ந்து கனேந்தானம் பண்ணி உபயோகித்துக்கொள்வார்களென அவர்களது மேலான கனத்தைக் கோருகிறேன்.

பேழைதடி, ம. துரைசாமி நாயகர்.



கடவுள்துணை.

# சிலையெழுபது

## மூலமும் உரையும்.

### பாயிரம்

பாயிரமென்பது.—வரலாறு. அது நூலுக்கு முன் சொல்வது. முகவுரை யெனினும், பாயிரமெனினும், நூன்முகமெனினும் ஒக்கும். அதை "ஆயிரமுகத்தா னகன்றதாயினும், பாயிரமில்லது பனுவ லன்றே." என்பவாகலின், மாநகர்க்குக் கோபுரமே போலும், இங்கே நூலுக்கு முதலில் வைத்து எட்டு கவிகளால் பாயிரங்கூறினர்.

### கடவுள் வணக்கம்.

கடவுள் வணக்கமென்பது:—தெய்வத்தை வணங்கிக் கொள்ளுதல். அது, இந்நூல் நிறைவுபெறற் பொருட்டாதலின் இங்கே பாயிரத்துக்கு முதலில் வைத்து கூறினர்.

### கோச்சகம்.

திருவளரும் வன்னியர்செஞ் சிலையெழுப தினைவிளம்ப, மருவளர்பைங் கடுக்கையும்வெண் மதியுமிலைந் தோன்வாமத், தருவளரும் வரைமடந்தை யுவந்தளிப்பத் தோன்றிவரந், தருவளஞ்செய் விகடசக்ரத் தந்திமுகன் றுணைதொழுவாம். (க)

இதன் பதப்பொருள். திருவளரும் வன்னியர்-செல்வம் நிறைந்திருக்கின்ற வன்னியர்களது, செம்சிலை எழுபதினை விளம்ப-(குலத்துக்குரிய) அழகிய சிலை எழுபதென்னும் பிரபந்தத்தைச் சொல்ல, மருவளர் பைங்கடுக்கையும் வெண்மதியும் மிலைந்தோன்-வாசனைதங்கிய பசியகொன்றை மாலையையும் வெள்ளிய சந்திரனையும் அணிந்த சிவபெருமானும், வாமத்து உருவளரும் மைவரை மடந்தை-(அவரது) இடது பாகத்து வடிவமைந்து விளங்கும் பார்வதி தேவியாரும், உவந்து அளிப்பத்தோன்றி களிப்பினோடு-பெறப்பிறந்து, வரந்தரு வளஞ்செய்-(பக்தர்கள் விரும்பும்) வரங்களைத் தரும் வளப்பத்தினைச் செய்யாநின்ற, விகட சக்ரத்தந்தி முகன்றாள் விகடசக்ர விநாயகரது பாதங்களை, தொழுவாம்-யாம் வணங்கு வாம் என்றவாறு.

கருத்து. சிலையெழுபது என்னும் இப்பிரபந்தத்தைச் சொல்ல விகட சக்ரவிநாயகர் பாதத்தை வணங்குவாம். என்பதாம்.

இவ்விநாயகருக்கு விகட சக்ர விநாயகரெனப் பெயர் வந்த காரணத்தை காஞ்சி புராணத்துட் காண்க.

அஷ்டஐசுவரியமு முடையவராகையால், திருவளரும் வன்னியர் என்றார். இதை கூச-வது கவியிற்காண்க. இதுவன்றி சஅ-வது கவியில் மாவகையாப் பெருஞ் செல்வரென்றதனாலு முணர்க.

இதில் வன்னியரென்பது:—சோம சூரியாக்கினி யென்னும் க்ஷத்திரிய குலத்தோர் மூவரையும் முக்குலத்தோருண்டென்பதென்னை, திருவிளையாடல் திருவாலவாய்க் காணடம் திருவாலவா யானபடலம்.

“வெள்ளநீர் வறப்பவாதி வேதியன் ஞானமுன்போ
னுள்ளவாறுதிப்ப நல்கி யும்பரோ டிம்பரேனைப்
புள்ளொடு விலங்கு நல்கிக் கதிருடற் புத்தேண் மூவர்
தள்ளருமாபின் முன்போற்றமிழ்வேந்தர் தமையுந்தந்தான்”

என்னும் ௪௨-வது கவியில் "கதிருடற் புத்தேண் மூவர் தள்ளருமரபின் முன்போற் றமிழ்வேந்தர் தமையுந்தந்தான்." என்றதனாலுணர்க. கதிருடற் புத்தேளிர் மூவராவார் முச்சுடரை. என்னை! திவாகரம் ௪௨-வது பல்பெயர் கூட்டத்தொருபெயர்த் தொகுதி "முச்சுடராதித்தன் சந்திர னங்கி, என்னும் ௧௧-வது சூத்திரத்தால் சூரியன் சந்திரன், அக்கினி என வுணர்க. தமிழ் வேந்தராவார், சேர, சோழ, பாண்டியரை, இவர்களிற் சேரன் அக்கினிகுலமென்க. அம்மூவேந்தருட் சேரன் அக்கினிகுல மென்ப தென்னை! ஸ்ரீவில்லிபுத்தூராழ்வார் பாரதம் ஆதிபருவம் திரௌபதி மாலையிட்ட சருக்கம்.

"இவன்சல் லியனென் றுரைசான்ற விகல்வேன் மன்னர்க் கேறனையா, னிவன்றன் பகைவர் யாவரையு மிமையோராக்கு மெழிலினீல, னிவன்றண் டமிழ்ச்சே ரடல்வழுதி யிவன்றே றிரவிகுலவளவ, னிவன்செந் தழலோன் மரபாகி யீரே ழுலகும் புகழ்ச்சேரன்."

"என்னும்." ௪௫ வது கவியில் "இவன் செந்தழலோன் மரபாகி யீரே ழுலகும் புகழ்ச்சேரன்" என்றதனு லுணர்க. திவாகர நிகண்டு முதலிய நூற்களிற் கூறியிருக்குமோ வெனின்; கூறியே யிருக்கின்றது. என்னை! தமிழ்வேந்தர் மூவருக்கும் முறையே பெயர் சொல்லவந்த பொழுது முன்னும் பின்னும் சேரனையும் பாண்டியனையும் இன்னகுல மென்று தோன்றாது வாளாகூறி, மத்தியிற் சோழன் பெயரைக் கூறும்போதுமாத்திரம் சூரியகுலமென்று தோன்ற சூரியனென ஒரு பெயரிருக்கிறது; இருக்கவே சூரியனுக்கு ஒளிகொடுப்பது அக்கினியாதலால், முதலிற் கூறுஞ் சேரன் அக்கினிகுல மென்றும் சூரியனால் ஒளிபெறுவது சந்திரனாதலால் இறுதியிற்கூறும் பாண்டியன் சந்திரகுல மென்றும் தானே குறிப்பாலுணர்ந்ததலா லுணர்க. வன்னி, தழல், அக்கினி, அகிங், கனல், சுசி எனபன ஒருபொருட் சொற்கள். அப்படியாகுங்கால் சேரன் குலத்தார் சிலையெழுப தென்றே கூறலாமே

யெனின்? அதற்கன்று; சேரன் குலத்தார் சிலையெ ழுப தென்று கூறின், மற்றைய விரண்டுகுலமுங் குறிப்பாலடங்கி யிருப்பினும் வெளிப்படையிற் பொருந்தா? வன்னியரென்பதோ இயற்கையிற் சேரன் குலமாயினும் மற்றைய இரண்டு குலத்தையுந் தழுவிக்காட்டுமென்னுங் கருத்தால் இந்நூலாசிரியர் வன்னியர் சிலையெழுப தென்றே கூறினரெனவுணர்க. மற்றைய விரண்டுகுலமுஞ் சேரன குலத்தி லடங்குமென்ப தென்னை! குலசேகரப்பெருமாள் சொன்ன திராவிட வேதமாகிய பெரியதிரு மொழி முதலாயிரத்தில் உகூ-வது தேட்டந்திறல் அழகிய மணவாளர் விஷயம்.

"அல்லிமாமலர் மங்கைநாதனரங்கன் மெய்யடி யார்கடம் மெல்லையி லடிமைத் திறத்தினிலென்று மேவுமனத்தனாங், கொல்லிகாவலன் கூடல்நாயகன் கோழிக்கோன் குலசேகரன் சொல்லினின்றமிழ் மாலைவல்லவர் தொண்டர் தொண்டர்களாவரே."

"என்னும்க௰-வது பாசுரத்தில் இவர் அக்கினி குலமாகிய சேரன் குலத்தாராகவிருந்தும் சூரியகுலமென்பது தோன்ற கோழிக்கோனென்றும், சந்திரகுலமுந் தானெனத் தோன்ற கூடல் காவலனென்றுங் கூறியவாற்றா னுணர்க. உருத்ர வன்னியன், இக்ஷ்வாகு, புரூரவா முதலினோர் வம்சங்களையுங் காட்டுமோ வெனின் காட்டுமென்க. என்னை? இந்நூலில்ஆக்னேயக் கருத்தையொட்டி "சம்புகோத்திரவரெனப்" பலவிடங்களிற் சொல்லி யிருப்பதால் உருத்ர வன்னியன் முதலியோரையும், மேற்படி குலசேகரப் பெருமாள் சொன்ன கண்ணபுரத்தொளிர் காருத்தன்றாலாட்டு.

"கொங்குமலி கருங்குழலாள் கோசலைதன் குலமதலாய்
தங்குபெரும் புகழ்ச்சனகன் றிருமருகா தாசரதி
கங்கையினுந் தீர்த்தமலி கணபுரத்தெங் கருமணியே
யெங்கள்குலத் தின்னமுதே யிராகவனே தாலேலோ,"

என்னும் ௩-வது பாசுரத்தில் இராமனை எங்கள் குல மென்றாராதலின் இட்சுவாகு முதலியோரையும், மேற்படி சேய்வளர் காகுஷியின்சீரை கோதைபோல் தாய்தேவகிபெருந் தாழ்வெணிப் புலம்பல் "மூந்தை நன்முறை யன்புடை மக ளிர் முறைமுறைத் தத்தங் குறங்கிடையிருத்தி-யெந்தையே யென்றன் குலப்பெருஞ் சுடரே யெழுமுகிற் கணத் தொழில் கவ ரேறே-யுந்தை யாவனென் றுரைப்பநின் செங்கேழ்விரலி னுங்கடைக் கண்ணினுங் காட்ட – நந்தன் பெற்றன னல்லு ணர் வில்லா நங்கள் கோன்வசு தேவன் பெற்றிலனே"

என்னும் ௩-வது பாசுரத்தில் நங்கள்கோன் வசுதேவன் என்றதனால் புரூரவா முதலியோரையும் காட்டியதை தயுணர்க, இதன் ௭-வது கவியில் "வன்னி யிறைக்குலத்தி லுதித்தவரே" என்றும், நூல் முதற் கவியில் "அணிவனிய குலவரசர்"என்றும் ௪-வது கவியில் "வனிய குலவரசர்" என்றும், ௭-வது கவியில் "சுசியுதித்தோர்" என்றும், ௧௨-வது கவியில் "அக்கினிகுலத் தரசர்" என்றும், ௧௫-வது கவியில் "வன்னிமன்னர்" என் றும் ௨௰-ல் "உறழ்தோளார் வன்னிமன்னர்" என்றும், ௨௧-ல் "வனிய குலவரசர்" என்றும், ௨௩-ல் "திண்ணமுறு வன்னிமன் னர்" என்றும், ௩௨-ல் "சயங்கூற வன்னிமன்னர்" என்றும் ௩௩-ல் "வேதியர்க்குதவு வன்னி மன்னர்" என்றும், ௩௪-ல் "புகழ் வனிய வரசர்" என்றும், ௩௫-ல் வயமுறு வன்னிய வர சர்" என்றும், ௩௭-ல் 'வீரவன்னிமன்னர்" என்றும் ௩௮-ல் "வன்னிமன்னரெனு மேன்மக்கள்" என்றும், ௪௰-ல் "சீராரும் வன்னிமன்னர்" என்றும், ௪௧ல் "தழலிடை வந்வவதரித் தோர்" என்றும், ௫௧-ல் மூன்று குலத்தினுள் "தாய்தாங்கனற் றோன்றும், பன்னும் புகழ் கொளரசர்களை" என்றும், ௫௨-ல் "மிக்கோர் வன்னிமன்னர்" என்றும், ௫௫-ல் "வன்னி யரசர் சமுகம்" என்றும், ௫௬-ல் "வன்னிவேந்தர்" என்றும், ௯௨-ல் "வனிய நிருபர்" என்றும் ௯௯-ல் 'வன்னியரசன்றி" என்றும் பிரித்துக் கூறியிருக்கின்றதே யெனில்? அதற்கு இதன் ௮-வது கவியில் "மலயமன்னர் குன்றவர் பல்லவர்" என்றும், நூல்

௯-ல் "படி புரக்க வவதரித்த பண்ணடைர்" என்றும், ௮-ல் "இறைவர் பண்ணடைர்" என்றும், ௨௯-ல் "வாழ்விக்கும் பண்ணடர்" என்றும், ௬௯-ல் "அரசாள்வது பண்ணடைர் தந்தொழிலே" என்றும், ௪௫-ல் "நவில் பண்ணடைட்டாரே" என்றும், ௫௦-ல் மங்கையர்கோன் சொலத்தகு பல்லவராயன் மரபிற் றோன்றி" என்றும், ௫௯-ல் குணத்தோர் பண்ணடைரே என்றும் ௫௫-ல் "தமிழ்வேந்தர் இமையப் பொருப்பர் பண்ணடைர்", என்றும், ௫௬-ல் "பண்ணடைர் தமது பெரும்பதி யிருப்பால்" என்றும், ௬௬-ல் "நாடு பலவினுக்கரசு பண்ணடு" என்றும், ௬௭-ல் "வீர பண்ணடைர் வில்லை" என்றும், மற்றைய கவிகளில் பொதுவில் "வன்னியர்" என்றும், ௬௧-வது கவியாகிய கொடிச்சிறப்பில் "அடர்ப் புவி மூன்றினுந் தாமே அரசியற்றும்படிதாவ" என்றும் கூறி யிருப்பதால் பொதுவாயதெனவே துணிக. மிகுதிபற்றிச் சிறப்பென லாகாதோவெனில்? அறியாது கூறினாய்! மதுதெளிவெனச் சொல் முதுமொழி நல்லாய். * அக்கினிக்குள் சூரியனும் சூரியனுக்குள் சந்திரனும் அடங்குதலின் உற்று நோக்குங்கால் முழுமையும் அக்கினியின்மயமேயன்றிவேறுயாது? நீயே கூறுக. அதுபோல அவ்வக்கினிகுலமே மற்றையது மென்பார் மிகுதியுமமைத்துக் கூறினரென வுணர்க. இக்காரணங்களால் வன்னியரென்னும் பதம்: யுகங்கடோறும் † ஆதியில் பிரமாவினாலேயே தோன்றி

---

* க்ஷத்திரியகுல மூன்றனுள் முதன்மையுடையது அக்கினிகுலம்; அக்குலத்துக்குரிய அரசிலாகிய படை முதலிய வுறுப்புகளே மற்றைய விரண்டுகுலத்துக்கு மாதலாலும், அதனால் சூரியகுலச் சிலையெழுபது சந்திரகுலச் சிலையெழுபது எனவெடுக்கின் சொன்னத்தையே சொல்லவேண்டி வருதலின் கூறியது கூறல் கூற்ற மாதலோடும் பொருத்த மின்மையாலும் அக்கினிகுல மொன்றற்கே கூறின் மற்றையதும் அடங்குமென்பார் கூறினா ரென்பாரு முளர். அப்படி அமைக்கினுமமைக்க. இக்ஷ்வாகு முதலியோர் சூரியகுலத்தவரும், புரூரவா முதலியோர் சந்திரகுலத்தவரும் ஆவர்

† இதை இதன் ௫-வது கவியினுங்காண்க.

தமிழ்வேந்தர் மூவருள் சேரன் குலத்துக்காகி, பிறகு சோழ பாண்டியர்களைத் தழுவிக்காட்டி மற்றைய தேசத்தார்களுக்கு மாயதோர் மொழியென வுணர்க.

## நூற்பெயரும், ஆக்கியோன் பெயரும்.

நூற்பெயரும் ஆக்கியோன் பெயருமென்பது, நூலினது பெயரும் அதை செய்தவன் பெயர் முதலியன. அதுவட நூல் வழக்குபற்றி தானே நாந்திக்கூறி கொள்ளுதலின் இங்கே கடவுள் வணக்கத்தின் பின்வைத்து கூறினர்.

## அறுசீர்கழிநெடிலாசிரியவிருத்தம்.

முந்துநாள் வீரசம்பு முனிசெய்மா மகத்திற் போந்த, சந்ததியார் சீரோது கெனத்தகு முதியோர் கேட்ப, இந்தணி சடிலத்தெம்மா னிணைக்கழல் பராஅ யிசைத்தான், செந்தமிழ்க் கம்பன்செம்பொற் சிலை யெழு பதுவாமிந்நூல். (உ)

(இ-ள்.) (கருணைகரச்சோழன் கம்பரைப் பார்த்து.) முந்துநாள்- ஆதியில்—வீரசம்பு முனிசெய் மாமகத்தில் போந்த சந்ததியார் சீர் - விஜயத்தைக்கொண்ட சம்புமுனிவரால் செய்யப்பட்ட மகத்தாகிய யாகத்தில்வந்த உருத்திர வன்னிய மகாராஜன் முதலியோர்) சந்ததியர்களாகிய (வன்னியர்களது) சிறப்பை (சொல்லும் நீர்செய்த பிரபந்தத்தை) ஓதுவா-சொல்லுக என்று சொல்ல, தகு முதியோர்கேட்ப -(அப்பொழுது அவனது சபையில தங்கிய) தகுதி யுடைய பெரியோர்கள் கேட்டு மகிழும்படியாக—செந்தமிழ்க் கம்பன் செவ்விய தமிழை ஆய்ந்தகம்பரானவர்— இந்து அணி சடிலத்து-சந்திரனை தரித்த சடாபாரத்தினை யுடைய, எம்மான் இணைக்கழல்பராஇ - எமது பிராணாகிய பரமசிவனது இரண்டு பாதங்களையுந் தொழுது. செம்பொன் சிலை எழுபது ஆம் இந்நூலில் இசைத்தான் - மிக்க அழகினை யுடைய சிலையெழுபதென்னும் பெயர்கொண்ட இப்பிரபந்தத்தைச் சொன்னார் எ-று.

**கருத்து.** கம்பரானவர் கருணாகரன் சபையில் பெரியோர் கேட்டு மகிழும்படி சிலை யெழுபதெனனும் இப்பிரபந்தத்தைச் சொன்னாரென்பதாம்.

கம்பரென்றதனால் ஆக்கியோன் பெயரும், முந்துநாள் வீரசம்பு முனிவர் செய்மாமகத்திற் போந்த சந்ததியாரென்றதனால் முன்னூலின் வழியும், செந்தமிழென்றதனால் அது வழங்கு நிலமாகிய வடவேங்கடந் தென்குமரி மேல்கீழ் கடல் எல்லையும், சிலையெழுபதென்றதனால் நூற்பெயரும், சீர் என்றதனால் அந்நூற்குரிய வருணத்தவர்களது சிறப்பைத் தொகுத்துக் கூறுதல் என்னும் யாப்பும், அதனை விளக்கிக்காட்டுதல் நுதலிய பொருளும், அப்படிக்காட்டியவற்றை விளங்க அறிந்து கொள்ளுதல் பயனும், தகுமுதியோர் கேட்பவென்றதனால் கேட்போரும் ஆகிய எட்டினையும் வெளிப்படையினும், கருணாகரச்சோழன் ஆண்டநாள் காலமும், அவன் முன்னிலை அவையும், பரிசு பெறுதல் காரணமும் ஆகிய இம்மூன்றையும் குறிப்பினும் எச்சமாக்கிக் கூறினர் எனவுணர்க.

## கச்சித்தலத்தின் சிறப்பு.

கச்சித்தலத்தின் சிறப்பென்பது:—காஞ்சிநகரத்தினது பெருமை. அது இந்நூலறங்கேற்றிய நகரமாகையால் இனி பின்னரும் எடுத்தாளும் பொருட்டு மூன் விகட சக்ர விநாயகனை வணங்கிக்கொண்டது போல இங்கே காலம், களன், காரணம் ஆகிய மூன்றையுங் குறிக்கவேண்டி ஆக்கியோன் பெயருக்கும் நூற்பெயருக்கும் பின் வைத்து கூறினார்.

வேறு.

மெச்சுந்தரங்கக் கடலுலகின் மிளிருந்தலங்கண் மிகவெனினு, மிச்சித்தவர்தங் குறைவெயின் முன்னிமேம்போற்கடிதற்கியலாவே, பச்சைவண்ணத் திருமாலும் பவளவண்ணச் சோதியும்வாழ், கச்சித்தலத்தைப் புரையுமெனக் கழறத்தலங்கள் காணேமால்.(கூ

(இ-ள்.) தரங்கக் கடலுலகில்-அலைகள் பொருந்திய சமுத்திரஞ் சூழ்ந்த இவ்வுலகத்தில்,மிளிரும் தலங்கள் மிகஎனினும்-விளங்கும் க்ஷேத்திரங்கள் பல என்று சொல்லினும், இச்சித்தவர் தங்குறை-இச்சித்தவர்கள் தங்கள், குறைகளை-வெயில் முன் இமம்போல் கடிதற்கு இயலா-சூரியனுனவன் தன் முன் உண்டாகும் பனியை நீக்குமாறுபோல விலக்குதற்கு முடியாது (ஆதலால்)-பச்சை வண்ணத் திருமாலும்-மரகதவண்ணனுகிய விஷ்ணுவும்,-பவளவண்ணச் சோதியும்-பவளவண்ணனுகிய சிவபெருமானும்,-வாழ்-வாழும்-மெச்சும் கச்சித்தலத்தைப் புரையுமெனக் கழற யாவருந் துதிக்கும் (இச்சித்தவர்கள் தங்கள் குறைகளை சூரியனுனவன் தன் முன்னுண்டாகும் பனியை நீக்குமாறுபோல் விலக்குவதற்கியைந்த) இக் கச்சித்தலத்தை யொக்குமென்று சொல்ல, தலங்கள் காணேம்.—க்ஷேத்திரங்கள் அறியேம். எ - று ஆல்—ஏ - அசைகள்.

**கருத்து.** இவ்வுலகத்தில் காஞ்சி க்ஷேத்திரம் ஒன்றுமே தன்னை விரும்பியவர்களுக்கு எல்லா வின்பத்தையுங் கொடுக்க வல்லதென்பதாம்.

இதில் சிவன் விஷ்ணு இருவருக்கும் காஞ்சிபுரியுரிமை யுடைமையாதலை நூலின் ௫௦-வது கவியிற்காண்க.

## கோத்திரச்சிறப்பு.

கோத்திரச்சிறப்பென்பது வம்சத்தின் மூலபுருஷர் பெருமை. அது, அம்மூலபுருஷரின் சந்ததியார் சிறப்பே இந்நூலாதலின் இங்கே இந்நூலரங்கேற்றிய நகரமாகிய கச்சித்தலத்தின் சிறப்புக்குப் பின்வைத்துக் கூறினுர்.

சாத்திர மறைகள்சொற்ற நியமம் வாழா
தோர், சூத்திரந் தவறில்வன்னி தோன்றுமெய்ப்
புகழ்காப்பாளர், மாத்திரை யளவுஞான மறைப்பின்
மாதவங்கூர்சம்பு, கோத்திர வரசர்க்கொப்பக் கூறுவ
தெவரைமாதோ. (௬)

(இ - ள்.) தனிமறை சாத்திரங்கள் சொற்ற - ஒப்பற்ற வேத சாத்திரங்கள் சொன்ன, தவறில் சூத்திரம் நியமம் வழாதோர் - தவறில்லாச் சூத்திர நியம (வழிகளில்) வழுவாதவர்களும்,—வன்னிதோன்றும் மெய்ப்புகழ் காப்பாளர் - அக்கினியிற்றோன்றும் உண்மையான புகழைக் காக்கின்றவர்களும், மாத்திரை அளவும் ஞானம் மறைப்பு இல மாதவங்கூர் சம்புகோத்திர அரசர்க்கு - இமைப்பொழுதேனும் ஞானபோதம் நீங்காத மகத்தாகிய தவமிகுந்த சம்பு கோத்திரவர்களுமாகிய (வன்னியரென்னும்) அரசர்களுக்கு, எவரை ஒப்பு கூறுவது - யாரைச் சமமாகச் சொல்லுவது. எ - று. மாதோ அசை.

**கருத்து.** வன்னியர்கள் சம்புகோத்திரவர்களென்பதாம் சூத்திரங்கள்-கூ. ஆபஸ்தம்பம் - ஆச்வலாயநம் - ஸத்யாஷாடம் - போதாயநம் - பாரத்வாஜம் - வைகாநஸம் என்பவைகள். இவைகள் அந்தந்த பெயரைக்கொண்ட இருடிகளால் சொல்லப்பட்டன.

## உற்பவச்சிறப்பு.

உற்பவச்சிறப்பென்பது முதல் முதல் வம்சமுண்டான பெருமை. அது இவ்வம்ச மூலபுருஷனுண்டாவதற்கு முன்பேயிருத்தலின் இங்கே கோத்திரச் சிறப்புக்குப் பின்வைத்து கூறினர்.

## கோச்சகம்.

திங்கண் மும்மழைபிலிற்றச் செழித் துயிர்கணனிமல்க
அங்கமோராறுமறை யந்தணராகுதியோங்கத்
துங்கமனுநெறிதழைப்பத் துகளறுவன்னியினின்றும்
பங்கயனுமுதலிவரைப் படைத்துலகுபடைத்தானல்.

(இ - ள்.) பங்கயனும்-(முற்கூறிய சம்பு விருடிக்கு முன்பாகவே) பிரமதேவரும், திங்கள் மும்மழை பிலிற்ற - மாத மும்மாரி பொழியவும்,-உயிர்கள் செழித்து நனி மல்க-

உயிர்கள் செழிப்பையடைந்து மிகவும் விளங்கவும், அந்தணர் ஓர் ஆறு அங்கமறை ஆகுதி ஓங்க - பிராமணர்களது ஆறு அங்கத்தினையுடைய வேதாகுதி வளரவும், துங்க மனு நெறி தழைப்ப - உயர்வாகிய மனுமுறை பரவும்படியாகவும், துகள் அறு வன்னியில் நின்றும் - குற்றமில்லாத அக்கினியினின்றும், முதல் இவரைப்படைத்து - படைப்பு ஆதியில் இவ்வன்னியர்களை உண்டாக்கி—உலகுபடைத்தான்-(பிறகு மற்றைய மனிதர் முதலிய) உயிர்களையும் உண்டாக்கினர். எ - று. ஆல் - அசை.

**கருத்து.** பிரமாவானவர் சம்புவிருடிக்கு முன்பாகவே மாதமும்மாரி பொழியவும் அதனல் உயிர்கள் செழித்துப் பல்கவும், வேதாகுதிகள் வளரவும், மனுநெறி பரவவும், அக்கினியினின்றும் க்ஷத்திரியராகிய இவ்வன்னியரை உண்டாக்கிய பிறகு மற்றய மனிதர் முதலிய உயிர்களையும் உண்டாக்கினர் என்பதாம்.

இதில் முதலில் அரசன் ஏற்பட்டு முறை நியமித்துநடத்தப் பிறகு குடிகள் அதன்வழி நடக்கிறதாகையால் அதைக்கொண்டு "பங்கயனு முதலிவரைப் படைத்துலகு படைத்தான்" என்ருர். இதை குமாருருபரசுவாமிகள் அருளிய நீதிநெறி விளக்கம்.

"இகழி நிகழ்ந்தாங் கிறைமக னென்று
புகழினு மொக்கப் புகழ்ப - இகன் மன்னன்
சீர்வழிப்பட்டதே பன்புதை மற்றெனசெய்மம்
நீர்வழிப் பட்டபுணை"

என்னும் ௬௬-வது பாட்டிற்காண்க. அன்றியும் மனுஸ்மிருதி எ-வது அத்தியாயம் அரசன் சிறப்பு; அரசன் சிறுவனயிருந்த போதிலும் அவனை மனிதனென்று அவமானஞ் செய்யக்கூடாது; ஏனெனில் மேலான தேவர்களின் கூட்டமே அந்த அரசன் உறவாயிருக்கிறதல்லவா"? என்னும் அ-வது சுலோகத்தின்கீழ்" அக்கினியானது அஜாக்கிரதையாய் தன்கிட்ட

வந்தவனை மாத்திரந் தகிக்கும்; அரசனுகிற அக்கினி கோபித்துக்கொண்டால் தனம் தான்யம் புத்ர மித்ர களத்ராதிகளோடும் அழித்துப்போடும் "என்னும் கூ-வது சுலோகத்தானும்," அவ்வரசன் காரியா காரியங்களையும் தன் சக்தியையும் தேசகாலங்களையும் நன்ருக யோசித்து தரும சித்தியின் பொருட்டு அநேக ரூபத்தை எடுத்துக் கொள்ளுகிருன். அதாவது தனக்கு பலஹீன காலத்தில் அடங்கி இருப்பான் பலமுள்ள போது போர்க்கு வருவான்" என்னும் கO-வது சுலோகத்தாலும்; "எந்த அரசன் தயையினுல் பொருளும் சத்ருஜெயமும் உண்டாகிறதோ அவன் தேஜோரூபனல்லவா? ஆதலால் பொருளை விரும்பினவனும் சத்துரு ஜெயத்தை விரும்பினவனும் ஜீவித்திருப்பதை விரும்பினவனும் அவனை எதிர்க்கக்கூடாது "என்னும் கக-வது சுலோகத்தானும்" அவ்வரசனேடு எவன் புத்தியில்லாமையால் துவேஷித்துவக் கொள்ளுகிருனே அவன் தானுகவே அழிந்து போகிருன் அரசனும் அவன் அழிகிறதைக் குறித்து யோஜிக்கிருன் என்னும் கஉ-வது சுலோகத்திலும், ஆதலால் "அவ்வரசன் எதை அனுஷ்டிக்கும் படியாயும் நீக்கும்படியாயும் ஏற்பாடு செய்கிருனே அதை ஒருவரும் தடுக்கக்கூடாது" என்னும் கங-வது சுலோகத்தானும் அறிக.

ஆறங்கமாவன, மந்திரம், வியாகரணம், நிகண்டு-சந்தோபசிதி, நிருத்தம்:—சோதிடம் என்பன! தி-கஉ வு-தி. "ஆறங்க மந்திரம் வியாகரண நிகண்டு' சந்தோபசிதி நிருத்தஞ் சோதிடம்" என்னும் எஅ-வது சூ-க. வட்நூலார் மந்திரத்தைக் கல்பம் என்றும், நிகண்டை சிக்ஷை என்றும் வழங்குவர்

## குலச்சிறப்பு.

குலச்சிறப்பென்பது:—வம்சத்தின் பெருமை. அதுவம்சம் தோன்றியபின் அமைதலின் இங்கே இரண்டு கவிகளால் உற்பவச் சிறப்புக்குப் பின் வைத்து கூறினர்.

விதிகுலத்தோர் சிறப்புறச்செய் வேள்விக்குச் சிறந்தவன்னி, உதிகுலத்தோ ராதலினுலுயர் குலத்

தோ ராமிவர்க்கத், துதிகுலத்தோ ரொவ்வாரேற் சோலும்வணிக குலத்தோரும், நதிகுலத்தோர் களு மெங்ஙனுட்டினிலொப் பாவாரே. (சு)

(இ-ள்,) நாட்டில்-உலகில், சொல்லும் விதிகுலத்தோர்-யாவரும் புகழும் பிராமணர்கள்,சிறப்புறச்செய் வேள்விக்குச் சிறந்த-அழகு பொருந்தச் செய்யும் யாகத்திற்குச் சிறந்திருக்கின்ற வன்னி உதிகுலத்தோர் ஆதலின், அக்கினியே பிறந்த குலத்தவராகையால்-உயர்குலத்தோராம்-உயர்வாகிய ஜாதியர்களாகும்;—இவர்க்கு அத்துதி குலத்தோர் ஒவ்வாரேல் இவ்வன்னியர்களுக்கு, (இவரில் உயர்ந்திருக்கின்ற) அப்பிராமணர்களும் ஐசுவரியத்தினுலன்றி ஜாதியினுலும் ஒப்பாகார்களானுல்,வணிககுலத்தோரும்- (இவரிற்றாழ்ந்திருக்கின்ற) செட்டி ஜாதியாருங், நதிகுலத்தோர்களும்-வேளாள ஜாதியாரும்,—எங்ஙன் ஒப்பாவார்-எவ்விதம் ஒப்பாகுவர்கள். எ-று. ஆல்-ஏ-அசைகள்.

கருத்து. வன்னியர்கள் காரணத்தால் இவரில் உயர்ந்த பிராமணர்களினும் சிறந்தவர்களாகிறுர்கள் என்பதாம்.

இதில் பின் வருணமுறை பிறழ்ந்து வருமிடங்கடோறும் இங்ஙனம் அமைத்துக்கொள்ளல் !வேண்டும் என்பார். முதலில் பிராமணர்களையும், இரண்டாவது க்ஷத்திரியர் என்னும் வன்னியர்களையும், மூன்றுவது வைசியர் என்னும் செட்டியர்களையும், நான்காவது சூத்திரர் என்னும்வேளாளர்களையும் வருணமுறை பிறழாது வைத்தார் என்க.

## இதுவுமது.

மறைக்குலத்தி லுதித்தாலென் மறையுணர்ந்தாலென்வணிகர், நிறைக்குலத்தி லுதித்தாலென் னிதிபடைத்தா லென்னுன்காம், முறைக்குலத்தி லுதித்தாலென் முயற்செய்தா லென்வன்னி, இறைக்குலத்தில் உதித்தவரே யிகபரனென் றியம்புவரே. (எ)

(இ-ள்,) மறைக்குலத்தில் உதித்தால்என்-பிராமணஜாதியிற் பிறந்தால் என்ன?— மறை உணர்ந்தால்என்-வேதங்களைத் தெரிந்தால் என்ன?—நிறைவணிகர் குலத்தில் உதித்தால் என்-நிறைக்குரிய செட்டி ஜாதியிற் பிறந்ததால் என்ன?— நிதிபடைத்தால் என்-மிக்க தன சம்பத்தைப்படைத்ததால் என்ன?-முறை நான்கு ஆம்குலத்தில்உதித்தால்என்-முறையே நான்காவது ஜாதியாராகிய வேளாள ஜாதியிற் பிறந்ததால் என்ன?—முயற்சி செய்தால் என்- (உழவு தொழில் முதலிய பல) முயற்சிகளைச் செய்ததா லென்ன?—[இம்மூன்று ஜாதியிற் பிறந்து அவ்வச்சாதி நடைகளாலடையும் பிரையோசனங்களில் ஒரு விசேடமும் இல்லை என்றபடி] வன்னி இறைக்குலத்தில் உதித்தவரே-வன்னியரென்று சொல்லுகிற க்ஷத்திரிய ஜாதியிற் பிரந்தவர்களோ! (அப்படி அல்லர்)—இகபரன் என்று-இவ்வுலகத்திற்குக் கடவுள் என்று. இயம்புவர் யாவரும் சொல்லுகின்றவர்கள் ஆகிறார்கள் எ-று. ஏ-அசை

இகபரன் பால்வழுவமைதி.

**கருத்து** வன்னியர்கள் இவ்வுலகத்திற்கு கடவுள் என்று யாவரும் சொல்லுகின்றவராகிறார்கள் என்பதாம்.

இதில் பல நூற்களிலும் பிராமணர்களுக்காறும் வைசியர்களுக்கு ஆறும், சூத்திரர்களுக்கு ஆறும் தொழில்கள் கூறியிருக்க இங்கே ஒவ்வொன்றும்; வன்னியரென்னும் க்ஷத்திரியர்களுக்கு உரிய தொழில்கள் ஓதல், வேட்டல், ஈதல், படைக்கலம் பயிறல், வென்றி என்ன ஆறனுள் ஒன்றையுங் குறிக்காது “வன்னி இறைக்குலத்தி லுதித்தவரே இகபரனென் றியம்புவரே” என்று கூறிய தெங்ஙனமெனின். பிராமணர்களுக்கு ஓதலும், செட்டியார்களுக்குப்பொருளீட்டலும், வேளாளர்களுக்கு உழுதலும் சிறத்தலால் ஒவ்வொன்று கூறி அரசர்களுக்கு அவர்களது அறுதொழில்களுள் “புரைதீரப்பெரும் பார் புரத்தல்” என்னும் செங்கோன் முறைமையே சிறத்தலின் அதையின் அரசில் செங்கோற்சிறப்பு முதலி யவைகளால் தெரிவிப்பா மென்னுங் குறிப்பாகவே

கூறினு ரென்க அரசருக்குரிய அறுதொழிலை கி-கஉ-வ-தி அரசு றறுதொழி லோதல் வேட்டல்-புரைதீரப் பெரும்பார் புரத்த லீதல்-களையறு படைக்கலங் கற்றல் விசயம் "என்னும் எஃ-வது சூத்திரத்தானும், மற்றைய மூவருணத்தவர்க்கும் அவ்வாறு தொழிலென்பதை அரசின் கஃ-வது கவியினுரையி னும், பொதுவில் நால்வருக்கும் ஒவ்வொன்றே சிறந்த வென் பதை அதிவீர ராமபாண்டியன் சொன்ன நறுந்தொகை என்னும் வெற்றி வேற்கை "வேதியர்க் கழகு வேதமு, மொழுக்கமும் என்னும் ச-வது சூத்திரத்தானும், "மன்னவர்க் கழகு செங்கோன் முறைமை என்னும் ரு-வது சூத்திரத்தானும் "வைசியர்க் கழகு வளர்பொருளீட்டல்" என்னும் சு-வது சூத்திரத்தானும், "உழவர்க் கழகிங் குழுதூண் விரும்பல்" என்னும் எ-வது சூத்திரத்தானும் உணர்க. பிராமணர்களுக்கு அடுத்து க்ஷத்திரியர்களைக் கூறவேண்டியிருக்க ஈற்றிற் கூறிய தென்னையோவெனின் இவர்களையன்றி மற்றையர் யாவரும் இவர்கள் ஆக்கினையிற் றங்கிய வென்பார் ஈற்றில் வைத்துக் கூறினரென்க. இகபரன்-அதாவது உலகத்திற்கு கடவுள் என்று கூறிய தென்னையோ வெனின். இவ்வருணத்திற்குரிய செங்கோன் முறைமை அரசினும், அரசு, அரண்படைமுதலிய வைகளினும் சிறத்தலின் அதை இங்கே படை, அரண், அரசு முதலாக வகுத்தவர் படையை இருபத்தெட்டு கவிகளானும் அரணை இரண்டு கவிகளானும் கூறி, அரசு முப்பத்தெட்டு கவிகளால், சிங்காதனம் முடிதரித்தல், புயகேயூர கிரீடம், குடை செங்கோல், ஆத்திநெறி, ஆக்கினைச் சக்கரம், செல் வாக்கு, மாசகற்றல், பெருந்தன்மை, இதயவண்மை, இராச சமுகம், பதியிருத்தல், மன்னர் சூழ்தல், மொழி தவறாமை, கொடைவளம், வள்ளற்றன்மை, அடுத்தவர்க்குத் தாழ்வின் றெனல், உமையருள் பெற்றோரெனல், அஷ்ட ஐசுவரியம் தசாங்கம் என்பன முதலாக முப்பத்து நான்கு சிறப் புகளோடும் அதன் இருபத்தொன்பதாவது கவியில் "அரன் மாலிந்திரன் குகன் வேளென வன்னி வேந்தர் சிறந்திருப்

பதை இம் மேதினியே விளம்பிடுமால்'' என்று கூறியிருக்கின்றாரல்லவா பூம்பாவைபோல் வாய்! நீயே நன்குணர்ந்து கூறுவாயாக. இவை முதலாய மேம்பா டுடையவர்களை கடவுளென்பதில் ஐயமென்னை யுளது. அன்றியும் அரசனுக்கு இறையெனப் பெயர் வந்தது கடவுட் டன்மையினு லாதலின் அக்குலத்து வந்தவர்களும் கடவுளென்பார் "வன்னியிறைக்குலத்தி லுதித்தவரே" என்றும் அவர்களே "இகபரனென் றியம்புவரே" என்றுங் கூறினுரென்க. அரசனைத் தெய்வமென பிறர் கூறுவரோ வெனின் கூறினுரென்க- அதை கற்புடை மகளிற்கு கணவனே தெய்வமாதல் போலும் புதல்வற்கு பெற்றோரே தெய்வமாதல் போலும் முனிவர்களுக்கு குருவே தெய்வமாதல் போலும்யாவருக்கும் அரசனே தெய்வமென்னுங் கருத்தைக் கொண்ட நீதிநெறி விளக்கம்.

"குலமகட்குத் தெய்வங்கொழுனனே மன்றப்-புதல்வர்க்குத்தந்தையுந் தாயு-மறவோர்க்-கடிகளே தெய்வ மனைவோர்க்குந்தெய்வ-மிலைமுகப்பைம்பூ ணிறை'' என்னும் உஎ-வது கவியாலுணர்க. அன்றியும் மகாபாரதம் சாந்திபர்வம் வீட்டுமனை கண்ட சருக்கம் "அரசனே யுலகினுக்கு யிராசனே. தரும-மரசனே பெருங் கடவுளு மவனிலை யென்னில்-வினைசெய் மாலையாய் மின்னனுர் கற்புமெய்ப் பொருளு - முறைசெய் முன்னரே தீர்தரு மென்கோலோ வுளவாம்'' என்னும் நிக-வது கவியிற்காண்க. நாயனுரும் "முறை செய்து காப்பாற்று மன்னவன் மக்கட் - கிறையென்று வைக்கப் படும்" என்றார் என்க. இக்கடவுளென்னுந் தன்மையே வன்னியர்களுக்குப்பள்ளியென்னும் பேர்வழங்கி வருகின்றதென்க. என்னை! *பள்ளி யென்பது-கடவுளாலயத்தின் பெயர் அது

* இந்த பள்ளிகள் என்னும் மொழியானது பாலா அதாவது காப்பவன் என்னும் மொழியினின்று மருவினதாகவும், சிலர் பல்லவர் என்னும் மொழியினின்று மருவினதாகவும் ஊகிக்கிறார்கள்.

அதில் தங்குதல்போலு மாகிய கடவுளுக்காகி அக்கடவுட் டன்மையைக் கொண்ட அரசனுக்கும் அவன் வம்சத்தவர் களுக்கும் ஆகுபெயராகி வழங்கி வருகின்றதென்க.

## படைத்துணைத்தலைவர் குலச்சிறப்பு.

படைத்துணைத் தலைவர் குலச்சிறப்பென்பது படைத் துணைக்குத் தலைமையாயவர் வம்சத்தின் பெருமை. அது குலபுருடர்கள் வீரப்பிரதாப முதலிய செயல்களால் வலிய டைந்து துணை சேர்த்துக் கொள்ளுதலின் இங்கே சிறப்புக் குப் பின்வைத்து கூறினர்

விடையுடையார் வரமுடையார் வேந்தர்கோ வெனவுடையார், நடையுடையார் மிடியுடைய நாவ லர்மாட் டருள்கொடையார், குடையுடையார் மலைய மன்னர் குன்றவர்பல் லவர்மும்முப், படையுடையார் வனியர்பிற ரென்னுடையார் பகரீரே. (அ)

(இ-ள்.) வன்னியர் வன்னியர்க ளானவர்கள்,—விடை யுடையார்-(நடுவு நிலைமையில் வழுவாது) உத்தரஞ்சொல்பவர் களும், வரமுடையார் – தெய்வானுக்ர கங்களை யுடையவர்க ளும்,—வேந்தர் கோ எனல் உடையார்—இராஜாதி இராஜர் என்று (யாவரும் சொல்லுந்) தரமுடை யவர்களும்,—நடையு டையார் (மேலான) ஒழுக்கத்தினை யுடையார்களும், மிடிஉ டைய நாவலர்மாட்டு அருள் கொடையார்-வறுமையையுடைய புலவர்களிடத்து கொடுக்கும் கொடையினை யுடையவர்களும், குடை யுடையயார் - (சந்திரவட்டக்) குடையினையுடையவர் களும், மலையமன்னர் குன்றவர் பல்லவர் மும்முப்படை உ டையார்-மலைய மன்னர் குன்றவர் பல்லவர் என (மூவகுப் போராய்) மூன்றுமூன்றுபடையினையுடையவர்களும்(ஆகிறார் கள்) பிறர் என் உடையார்-மற்றையோர் (இவ்வங்கங்களில்) எதை உடையவர்கள், பகரீர் - சொல்லு வீர்களாக. எ-று. ஏ-அசை.

**கருத்து:** வன்னியர்கள் நடுவுநிலைமை யுடையவர்களும், தெய்வானுக் கிரக முடையவர்களும், ராஜாதிஇராஜரென்று யாரும் சொல்லுந் தரமுடையவர்களும், ஒழுக்கத்தினை யுடையவர்களும், வித்வான்களுக்கு கொடுக்கும் கொடை யினை யுடையவர்களும், முத்துக்குடையினை யுடையவர்களும், மலையமன்னர் குன்றவர் பல்லவர் என மூவகுப்போராய் மூன்று மூன்று படையினை யுடையவர்களும் ஆகிறார்கள் என்பதாம்.

* மலைய மன்னரெனவே. பாண்டிய குலத்தவரையும், குன்றவரெனவே-(மலை நாடாகிய) சேரர் குலத்தவரையும், பல்லவ ரெனவே-சோழர் குலத்தவரையும் மும்முப்படை யெனவே-மூலம், துணை, கூலிஎன ஒவ்வொன்றுக்கும் மும் மூன்றாகவும் குறிப்பிட்டார்.

ஒன்பது படைத் துணைவர்கள். நத்தமன் சுருதிமன் மலையமன் என மூன்று, குறவர் வேடர் எருதி என மூன்று, மீனவர் அவிரியர் கூடைகட்டி என மூன்று ஆக ஒன்பது. இதைக் காஞ்சிபுர சாதனத்துட்காண்க. இப்படைத் துணைவர்கள் சாலியவாகன சஹாப்தம் எளகூ-க்கு முன் சிலகால மிருந்தத் தெரியவருகிறதென்க.

இதுவரையினும் நூலுக்குப் பாயிரங்கூறி
இனி நூல் கூறுவாராயிற் றென்க,

பாயிரம் முற்றிற்று

---

## நூல்.

---

நூலென்பது:—நூல்போலுந் தன்மையுடையது. அது இவ்வருணத்திற் குறிய அரசியலை அமைத்தலின் இங்கே பாயிரத்திற்குப் பின்வைத்து படை, அரண், அரசு வாழ்த்து என நான்கும் உறுப்பாக, எழுபத்தொரு கவிகளால் கூறினார்.

நூல்-உவமையாகுபெயர்.

---

* மலையென்பது பொதிகை மலை.

## படை.

---

படையென்பது: தானை. அது அரசியலுக்கு முதன்மைய தாதலின் இங்கே நூலுக்கு முதலில் வைத்து வில், வாள், வேல், யானை, குதிரை, தேர்என ஆறுவகையாக, உ௮-கவிகளால் கூறினர். நாயனாரும் "உறுப்பமைந் தூறஞ்சா வெல்படை வேந்தன் வெறுக்கையு ளெல்லாந் தலை" என்றாரென்க. அறுவகைத் தானையை தி-கஉ-வ-தி. "வேற்றானை வாட்டானை விற்றானை மேலோர் - தேர்த்தானை பரித்தானை களிற்றுத் தானையென - வாற்றல் சாறை வறுவகைத் தானை" என்னும், அஉ. வ-ரு-க.

## வில்.

---

வில்லென்பது அறுவகைத்தானையு ளொன்று. அப்படையுறுப்பாறனுள் ஒன்றாகிச் சிறத்தலோடும் அதன் பெயர்களுள் ஒன்றினாலேயே இந்நூற்குப் பெயர் அமைத்தலின், இங்கே அதைவலி யுறுத்தற்கு ஈற்றினுங் கூறுவதோடு படைக்கு முதலிலேவைத்து விஜைய தசமி நாட்கோடல், வில், விற்பிடி, வின்மணி, நாணி, வில்லேந்துதல், வில்வளைத்தல், நாணேற்றுதல், குணத்தொனி, அம்பறாத்தூணி, பிரமாத்திரம், நாராயணாத்திரம், பாசுபதாத்திரம், அபிமந்திரித்தல் நாணிறங்குதல் எனப் பதினைந்து சிறப்பாக இருபத்திரண்டு கவிகளால் கூறினர்.

இவைகளை ஸ்மிருதி, புராண, இதிகாசாதிகளிற் கண்டுணர்க

## * விஜய தசமி நாட்கோடற் சிறப்பு.

விஜய தசமி நாட்கோடற் சிறப்பென்பது:—வருடந்தோறும் வரும் புரட்டாசிமாத சுக்கிலபட்ச தசமி திதிவிரதங் கொள்ளுதலின் பெருமை. அது ஆயுத மெடுத்தல் அல்லது அம்புபோடுந் தினமாதலின், இங்கே பாயிரத்துட் கூறிய ஆயுதங்களை யுடையவராகிய படைத்துணைத் தலைவர் சிறப்பைத்தழுவி வில்வகுப்பிற்கு முதலில்வைத்தார்.

### கோச்சகம்.

சொன்மங்கலம் பொருந்துந் தொல்லுலகிற் பல்லுயிரும், நன்மங்கலம் பொருந்து நான்மறையு நனி விளங்கும், வன்மங்கலம் பொருந்தி வளர்வனிய குலவரசர், வின்மங்கலம் பொருந்தும் விறற் றசமிநாட்கொளினே. (க)

(இ-ள்.) தொல் உலகில் - பழமையான உலகத்தில், வன்மம் கலம் பொருந்தி வளர் வனிய குலஅரசர் - போர்க்கவசத்தைத் (தங்களுக்கு அலங்காரமாகிய) ஆபரணமாகப் பொருந்தி விளங்காநின்ற வன்னியகுல அரசர்களானவர்கள், வில் மங்கலம் பொருந்தும் விறல் தசமி நாள் கொளின்-வில்லுக்குச் சுபகரத்தைப் பொருந்தும் விஜய தசமி நாள் விரதத்தைக் கொண்டால், சொல்மங்கலம் பொருந்தும் - யாவருடைய சொற்களும் நீதியுடையனவாக இருக்கும்; பல்உயிரும் நலமங்கலம் பொருந்தும் - பலவாகிய உயிர்களும் நல்லசெழிப்பை யடையும், நான்மறையும் நனி விளங்கும்-நான்கு வேதங்களும் மிக்க பிரகாசத்தை யுடையும். எ-று.

---

* இத்தினம் - ஸர்வ ஜய ஸித்தி - என்றும் எந்தத் தோஷமும் இதற்கில்லை என்றும் வித்தை ஆரம்பத்துக்குத் தகுதியான நாளென்றும் வழங்கும்.

கருத்து: வன்னியர்கள் விஜயதசமி நாட்கோடலால் சொற்கள் நீதியும், உயிர்கள்செழிப்பும், வேதங்கள் பிரகாசமும் அடையும் என்பதாம்.

அமரம் இரண்டாங் காண்டம் க்ஷத்திரிய வர்க்கம்

பரீதாநஞ்சுபாவகர ஸநத்ருது த்ரவஞ்சுநம்ஸமநஃ |

உரஸ்த்ரஃ கங்கடகோ ஜாகரஃ கவசோஸ்த்ரியாம் ||

என்னும் நுஉக-வது சுலோகத்தினல் - வர்மம் கவசம் கர்மம் கன்மம்; தர்மம்; தன்மம் என்பபோல, வர்மம் வன்ம மென்றாயது.

## விற்சிறப்பு.

விற்சிறப்பென்பது:—வில்லின் பெருமைஅது தகுதியானநாளில் கைக்கொண்டு பழகுதலின், இங்கே விஜயதசமி நாட்கோடற் சிறப்புக்கு பின்வைத்து நான்கு கவிகளினல் கூறினர்.

### அறுசீர்க்கழி நெடிலாசிரியவிருத்தம்.

கலையாய்வன்னி குலோத்துங்கர் கரத்திற்கவின்
கொண் டமைந்தவென்றிச், சிலையாலன்றோ வேழ்புய
லுஞ் சேணிற்பொலியுந் திவாகரனும், அலையார்கட
லுங் கடையனலு மடன்மாருதமு மடங்கியொரு, நிலை
யாய்நின்ற மனுநீதி நெறியுநின்றதறியீரோ. (உ)

(இ-ள்.) குல உத்துங்க வன்னியர் - ஜாதியி லுயர்ந்த வன்னியர்களது, கரத்தில் கலையாய்கவின்கொண்டு அமைந்த -கையினிடத்து குல வித்தையாக அழகோடு பொருந்திய, வென்றிச் சிலையால்-வெற்றியதை தரத்தக்க வில்லினல், எழ்புயலும்-சத்தமேகங்களும், திவாகரனும்-சூரியனும், சேணில் பொலியும் - ஆகாயத்தில் விளங்குவனவாகும், அலை ஆர்கடலும்-அலைகள் நிறைந்த சமுத்திரமும், கடை அனலும்-ஊழித்தீயும், அடல் மாருதமும்-பிரசண்ட காற்றும், ஒருநிலையாய்

அடங்கிநின்ற-(தத்தம் வரம்பு கடவாது) ஒரு நிலையைப் பற்றி னதாகவே அடங்கி நின்றிருக்கின்றன. மனுநீதி நெறியும் நின்றமனுதரும வழியும் நின்றிருக்கின்றது அறியீரோ-அறியீர்களா. எ-று. அன்று-ஓ-ஓ-அசைகள்.

கருத்து-வன்னியர்கள் கையில் அமைந்த வில்லினால் சத்த மேகங்களும் சூரியனும் ஆகாயத்திற் பொலிதலும், சமுத்திரமும் வடவானலமும் பிரசண்டக் காற்றும் தத்தம் வரம்பு கடவாது அடங்கி நிற்றலும், மனுமுறை நிலைத்திருக்கின்றதும் ஆம் என்பதாம்.

## இதுவும் அது.

### வேறு.

மலையினிற் பொலங்கொண் மேருமலையன்றி மலை மற்றுண்டோ, கலையினி லுரைப்ப வெண்ணெண்கலையன்றிக் கலைமற் றுண்டோ, வலையினி லுகாந்த நீத்தத் தலையன்றியலைமற் றுண்டோ, சிலையினிற் றிறங்கூர்வன்யர் சிலையன்றிச் சிலைமற் றுண்டோ. (௬)

(இ-ள்.) மலையினில் பொலன்கொள் மேருமலை அன்றி மற்றுமலை உண்டோ-மலையில் பொன்மயங் கொண்ட மகா மேருவைத் தவிர வேறு மலை இருக்கிறதா? கலையினில் எண் எண் கலையன்றிமற்று உரைப்ப கலையுண்டோ-கலைக்கியானத்தில் அறுபத்துநான்கு கலையைத்தவிர வேறு சொல்வதற்கு கலை இருக்கிறதா? அலை உண்டோ-அலையில் பிரளய நீத்தத்தின் அலையைத்தவிர வேறு அலை இருக்கிறதா? (என்பதுபோல) சிலையினில் திறம் கூர்வன்னியர் சிலை அன்றிமற்று சிலை உண்டோ-வில்லில் வன்னியரது (அக்கினியிற்றோன்றிய) வில்லைத்தவிர வேறுவில் இருக்கிறதா? எ-று.

கருத்து. வன்னியர்களது அக்கினியிற் றோன்றியவில்லே சிறந்ததாகின்றது என்பதாம்.

## இதுவும் அது.

### வேறு,

அமரரொரு புறமரிய முனிவரொரு புறம் விசயை யரிவையொரு புறமடலுறுஞ், சமனுமொரு புறம்விரவு கழுகுமொரு பிறநெடிய தருமமொரு புறமுடைகொள் வாய், ஞமலியொரு புறமெரிக ணலகையொரு புறமிடர்செய் நரிகளொரு புறமகிழவெஞ், சமர்செய்திடு மணிமவுலியணிவனிய குலவரசர் தமதுகர மருவுசிலையே. (௬)

(இ-ள்.) மணி மவுலி அணி வனியகுல அரசர் தமது-இரத்தின கிரீடத்தைச் சூடி விளங்கா நின்ற வன்னிய ரென்னும் வரசர்களது, கர மருவு சிலைகையினிடத்து தங்கும் வில்லானது, அமரர் ஒருபுறம்-தேவர்கள் ஒருபக்கமும், அரிய முனிவர் ஒரு புறம்-அரிய (தவத்தினையுடைய) இருடிகள் ஒரு பக்கமும், விஜயை அரிவை ஒருபுறம்- துர்க்கை ஒரு பக்கமும், அடல் உறும் சமனும் ஒருபுறம் - கொல்லுகின்ற இயமனும் ஒரு பக்கமும், விரவு கழுகும் ஒருபுறம் - காக்கை பருந்துகளுடன் கலந்த கழுகுகள் ஒரு பக்கமும், நெடிய தருமம் ஒரு புறம் - அழியாத தருமம் ஒருபக்கமும், முடை கொள்வாய் ஞமலி ஒருபுறம் - புலால் நாற்றத்தைக் கொள்ளும் வாயினையுடைய நாய்கள் ஒரு பக்கமும், எரிகண் அலகை ஒருபுறம் அக்கினிக் கண்களை உடைய பேய்கள் ஒரு பக்கமும், இடர்செய் நரிகள் ஒருபுறம் - துன்பத்தைச் செய்யும் நரிகள் ஒரு பக்கமும் (சூழும்படி நின்று) மகிழ - களிப்பை யடைய, வெம் சமர் செய்திடும் - உக்ர யுத்தத்தைச் செய்யும் எ-று.

**கருத்து.** வன்னியர்களது வில் தேவர்களும், முனிவர்களும், துர்க்கையும், இயமனும், பருந்துகாகங்களோடு கலந்த கழுகுகளும், தருமமும், நாய்களும், பேய்களும், மகிழும்படி உக்கிர யுத்தத்தைச் செய்யும் என்பதாம்.

இதில் தேவர்கள் முனிவர்கள் - அசுரர் பயந்தீர்தலாலும் அவிகிடைத்தலாலும், நியமன்பாபாத் துமாக்க ளில்லாமையால் கவலையற் றிருத்தலாலும், துர்க்கை பலிகொள்ளுதலாலும், நாய் நரி காக்கை பருந்து கழுகுகள் ஆகாரங்கிடைத்தலாலும், பேய்கள் நிணக் கூழுண்ணுதலாலும், தருமம் நிலைகிடைத்தலாலும் மகிழ்வடைந்த வென்க.

இவைகளை கருணைகரசசோழன் பேரிற்செய்த கலிங்கத்துப்பரணியிலும், இராமாயண பாரதாதி இதிகாச புராணங்களுள் யுத்த கட்டங்களினுங் காண்க

இதுவும் அது

வேறு.

முட்டரை யறிஞராக்கு முனிவரைத் தவஞ்சீர்ப்பிக்கும், சிட்டருக் கரசுநல்குஞ் சேர்ந்தவர்க்குரம்பாலிக்கும், மட்டறு தெவ்வர் தம்மை வலிதபவச்சுறுத்தும், துட்டரைத் தொலைப்பவன்னி தோன்றுபொற்சிலையொன்றம்மா. (ரு)

(இ-ள்.) துட்டரைத்தொலுப்ப-துஷ்டர்களைத் தொலைக்கும் பொருட்டு, வன்னி தோன்றுபொற்சிலை ஒன்று-அக்கினியிற் றோன்றும்அழகிய வில் ஒன்றே, முட்டரை அறிஞர் ஆக்கும்-மூடர்களை விவேகிகளாக்கும். முனிவரைத் தவம் சீர்ப்பிக்கும்-முனிவர்களைத்தவத்தினல் சிறக்கச்செய்யும். சிட்டருக்கு அரசு நல்கும்-சிநேகர்களுக்கு அரசைக்கொடுக்கும், சேர்ந்தவர்க்கு உரம்பாலிக்கும்-தன்னை யடைந்தவர்களுக்குப் பலத்தைக் கொடுக்கும், மட்டு அறு தெவ்வர்தம்மை வலிதபவச்சுறுத்தும்-மிதமில்லாத பகைவர்களுக்கு வலி கெடும்படி அச்சத்தைக் கொடுக்கும் எ-று. அம்மா அசை,

கருத்து. வன்னியர்கள் வில் மூடர்களுக்கு விவேகமும், முனிவர்களுக்குத்தவமும், சினேகர்களுக்குஅரசும், தன்னைச் சேர்ந்தவர்களுக்குப் பலமும் உண்டாக்கும் என்பதாம்.

இதில் வன்னியர்களோடும் யாகத்திற்றோன்றிய வென்பார் "வன்னி தோன்று பொற்சிலை" என்றார். அழகிய சிலையொன்று கொள்ளலாமோ வெனின் கொள்ளினும் அமையுமென்க. என்னை? அரிச்சந்திரபுராணம் விவாக காண்டம்.

"நற்றேரை விட்டிறங்கி நாயகியைத் தொழுதிறைஞ்சி நண்ணிராசன், முற்றேரை நோக்குதலு முடிவேந்தன் கருணை விழிமுனை கண்டாக்க, கற்றேருங் கற்பரியுங் கற்சிலையுங் கற்கணையுங் கன்னிமுன்னே, பொற்றேரும் பொற்பரியும் பொற்சிலையும் பொற்கணையாப் பொலிந்த வன்றே"

எனனும் கஉடு-வது செய்யுளில்" பொற்சிலையும்" என்றதனால் அறிக. பொன்னுதலால் மூங்கிலாலாகிய விற்போலும் குணங்கள் பொருந்து மோவெனின்! தெய்வத் தன்மையால் பொருந்துமென்க. என்னை? புகலி திருஞானசம்பந்த நாயனாருக்குச் சிவபிரானால் கொடுக்கப்பட்ட பொன்னுலாகிய தாளம் ஓசையுற்றதாக திருத்தொண்டர் புராணமென்னும் பெரிய புராணத்துள் திருஞானசம்பந்த நாயனார் புராணத்தாலுணர்க. ரு

## விற்பிடிச்சிறப்பு.

விற்பிடிச்சிறப்பென்பது:—வில்லைப்பிடித்தலின் பெருமை. அது வில்லின் வடிவுகண்டு உரிமையுற்றபிறகு பற்றுதலின், இங்கே விற்சிறப்புக்குப் பின் வைத்து இரண்டு கவிகளால் கூறினர்.

மிடிகரக்கப் புலவருக்கு மிகுபொருளீந் திடுவார்தம்
அடியிரக்கத் தொடுபணிவார்க்கரசு தருங்கொடையாளர்
படிபுரக்க வவதரித்த பண்ணுடர் கரத்திமைவிற்
பிடியுரத்தி னலன்றோ பெருஞால முரமுறலே. (சா)

(இ-ள்) புலவருக்கு மிடிகரக்க மிகுபொருள் ஈந்திடுவார்-வித்வான்களுக்கு தரித்திரம் நீங்கும்படி மிக்கத்திரவியத்தைக் கொடுக்கின்றவர்களும், தம் அடிபணிவார்க்கு-தமது

பாதத்தில் (வீழ்ந்து) வணங்குவோர்களுக்கு,இரக்கத்தொடும் அரசுதரும் கொடையாளர் - இரக்கத்தோடும் அரசு கொடுக்கும் கொடையினை யுடையவர்களும் (ஆகிய) - படிபுரக்க அவதரித்த பண்ணுடர் - பூவுலகையாளும்படி யவதரித்த தமிணுடரென்னும் சேர சோழ பாண்டிய வன்னியர்களது காத்து அமை விற்பி உரத்திஞல் அன்றே - கையினிடம் அமைந்த விற்பிடி யுரத்திஞலல்லவா, பெருஞாலம் உரம் உறல்-பெரிய வுலகமானது நிலெபெற்றிருத்த (லாகின்றது)

கருத்து வன்னியர்கள் விற்பிடித்தலால் உலகு நிலே பெற்றிருக்கின்றது என்பதாம்.

இதில் "மிடிகரப்புலவருக்கு மிகுபொருளீந்திடுவார்" என்பதற்கு சத்திமுத்தப்புலவர் பாண்டியனது மதுரைக்கு வந்தபொழுது மழையிடரிஞல் அவ்வழிசென்ற நாரையை பார்த்து

"நாராய் நாராய் செங்காஞராய் பழம்படுபனையின் கிழங்குபிளந்தன்ன - பவளக்கூர்வாய் செங்காஞராய் நீயு நின் மனேவி தென்திசை குமரியாடி - வடதிசைக் கேகுவீராயினெம் - மூச்சத்தி முத்த வாவியுட்டங்கி - நனைசுவர்க்கூரை கனைகுரற்பல்லி - பாடுபார்த்திருக்குமெம் மனேவியைக் கண்டு - எங்கோன்மாறன் வழுதி கூடலி - வாடையின்றி வாடையின் மெலிந்து - கையது கொண்டு மெய்யது பொத்தி - காலதுகொண்டு மேலது தழீஇப் - பேழையுள்ளிருக்கும் பாம்பென வுயிர்க்கு - மேழை யாளனைக் கண்டன மெனுமே"

என்னும் பாடலே நகரிசோதனையாகவந்த பாண்டியன் கேட்டு அருள்புரிந்ததை:

"வெறும்புற்கையு மரிதாங்கிள்ளேச் சோறுமென் வீட்டில் வருமெறும்புக்கு மாஸ்பதமில்லே முன்ஞளென்னிருங் கலியாங் குறும்பைத் தவிர்த்த குடிதாங்கியைச்சென்று கூடியபின் தெறும்புற்கொள் யானேக் கவளங்கொள்ளாமற் றெவுட்டியதே"

என்னுங் கவியால் காண்க. விசேஷம் இவரது சரித் திரத்திற்காண்க. அன்றியும், சேரமான் பெருமாள் பாண பத்திரனுக்கு "மதிமலி புரிசை மாடக் கூடற்-பதியிசை நிலவு பானிற வரிச்சிற்-கன்னம் பயிற்பொழி லாலவாயின்-மன்னிய சிவன்யான் மொழிந்திடு மாற்றம்-பருவக் கொண்மூப் படி யெனப் பாவலர்க்-கொருமையினுரிமையினுதவி யணிதிகழ் - குருமா மணிதிகழ் குலவிய குடைக்கீழ்க்-செருமாவுகைக்குஞ் சேரலன் காண்க-பண்பால் யாழ்பயில் பாணபத்திரன்- றன் கோலென்பா லன்பனறன்பாற்-காண்பது கருதிப் போந்த னன்-மாண்பொருள் கொடுத்து வரவிடுப்பதுவே,"

என மதுரை சோமசுந்தரக்கடவுள் எழுதிக்கொடுத்த னுப்பிய திருமுகத்தைக் கண்டு கொடுத்த சரித்திரத்தை - பெரியபுராணம் திருவிளையாடல்களிற் காண்க. "தம் அடி இரக்கத்தோடும் பணிவார்க்கு அரசுதரும கொடையாளர்" என்பதற்கு இராமன் தம்மையடைந்தவர்களாகிய விபீஷ ணன், சுக்ரீவன் முதலியோர்களுக்கு பட்டாபிஷேகஞ் செய் திருப்பதால் - அச்சரிதங்களை இராமாயணத்திற் காண்க, "படிபுரக்க அவதரித்த பண்ணுடையார்" என்றதனால் அரசர் கள் உலகத்தைக் காக்கவேண்டியதற்கு ஏற்படுத்தப் பட் டார்கள் என்பதை - மனுஸ்மிருதி எ - வது அத்தியாயம் இராஜதருமம் "வேதத்திற் சொல்லிய உபநயன முதலான சமஸ்காரங்கள் செய்துக்கொண்டவனாயிருக்கிற க்ஷத்திரியனா லே இவ்வுலகம் விதிப்படி காப்பாற்றத் தக்கதென்று உ-வது சுலோகத்தானும், "உலகத்தில் அரசனில்லாமற் போனால் பலமுள்ளவரிடத்தில் பலமில்லாதவர்கள் பயத்தினா லழிந்து போவார்கள் ஆகையினால் இவ்வுலக மெல்லாம் அழியாமலி ருக்கும் பொருட்டு சுவாமியானவர் அரசனை யுண்டு பண்ணி னார்" என்னும் ௩-வது சுலோகத்தானும் உணர்க. பண்ணுடை ரென்றது தடிணுடர். பண் இசை. அது இயல் இசை நாடகம் என்னும் தமிழின் பகுதி மூன்றனுளொன்று "கிளந்த வல்ல வேறுபிற தோன்றினுங்-கிளந்தவற் றியலா னுணர்ந்தனர்

கொளலே" என்றதனால் ஆகுபெயராய்த் தமிழ் என்றாயது; அது வழங்கும் நிலத்தைப் பரிபாலிக்கின்றவர்க ளாகையால் தமிழுடைரென்றாயது. தமிழுடைரென நேரிற்கூறாத தென்னை யோவெனின் நன்று கூறினாய்! உலக முழுமையுந் தன்வயத்த தாதலோடு தமிழைப் பரிபாலிக்கின்ற வரசர்களும், தமிழும், அது வழங்கும் நிலமும் மிக்க கீர்த்தியும் வாய்ந்த தென்னுங் கருத்தால் பண்ணுடைரென்றா ரென்க. இதற்கு-இவர்களுக் குத் தமிழ் வேந்தரென வந்திருப்பதே சான்று. இதை பாயிரத்துட் காட்டிய திருவிளையாடற் கவியினும் இந்நூல் அரசின் உச-வது கவியினும், உலக முழுமையும் தன்வயத்த தாதலென்பதை ௸ ருச-வது கவியினுங் காண்க. சு

இதுவுமது.

மைப்படியு முடிலவுணர் வருக்கமாய் வுற்றதுவும்
இப்படியோ டனைத்துலகு மிணையினலம் பெற்றதுவும்
செய்ப்படியுஞ் சுசியுதித்தோர் நீள்பகழி தொடுசிலையின்
கைப்பிடியாண்மையினல்லா றகடைப்பிடியே தியம்பீரே.

(இ-ள்.) மைப்படியும் உடல் அவுணர் வருக்கமாய் வுற்றதுவும் - கருமை படியும் உடலினையுடைய இராக்ஷதர் களது வமிசம் (அடியோடும்) நாசமடைந்ததுவும், இப்படி யோடு அனைத்து உலகும் இணை இல் நலம் பெற்றதுவும்-இந்த உலகத்துடன் மற்றைய உலகங்களும் இணை சொல்லக்கூடாத நலத்தை அடைந்ததுவும், (ஆகும் - ஆகையால் இவைகளெல் லாம்,) செய்படியும் சுசி உதித்தோர் - செய்யா குதியேற்று விளங்கும் அக்கினியில் யுதித்தவர்களாகிய வன்னியர்கள், நீள் பகழி தொடு சிலையின்-நீண்ட பாணங்களை விடுக்கும் வில்லை, கைப்பிடி ஆண்மையின் அல்லால்-கையால் பற்றும் ஆண்மை யால் அல்லது, எது கடைப்பிடி-எதுவேறு உறுதி, இயம் பீர்-சொல்லுவீர்களாக. எ-று.

இயம்புவீர் இயம்பீரென இடை குறைந்து நின்றது. சிலையின்- என்றது உருபு மயக்கம்.

**கருத்து.** வன்னியர்கள் விற்பிடித்தலால் இராக்ஷத வருக்கங்களற்றதுவும். அதனால் இவ்வுலகத்தோடு மற்றைய உலகும் நல்ல நலத்தை பெற்றதுவும் ஆகும் என்பதாம்.

வின்மணிச்சிறப்பு என்பது:—வில்லிற்கட்டிய மணியின் பெருமை. அது வில்லைப்பிடித்த பிறகு அசை வுண்டு ஓசை யுறுதலின், இங்கே விற்படிச் சிறப்புக்குப் பின் வைத்து கூறினர்.

வின் மணிச்சிறப்பு

பணியிறைக்கங் கணனடியைப் பழிச்சுநர்வாதாபிமுடி
துணியிறைவர் பண்ணாடர் சோதிமணிமுடிவனியர்
அணியிறையேந் தியவயிர மாஞ்சிலையிலடருநவ
மணியிரையக் களகளென வயிறிரையுமாற்றலர்க்கே. ()

(இ-ள்.) பணி இறைக் கங்கணன் அடியைப் பழிச்சினர்-ஆதிசேட கங்கணனாகிய சிவபெருமான் திருவடிகளைத் துதிக்கின்றவர்களும், வாதாபி முடிதுணி இறைவா - வாதாபியின் சிரத்தைத் துணித்து பெருமையிற் சிறந்தவர்களும், பண்ணாடர் - தமிழ்நாடரென்னும் சேர சோழ பாண்டியரும், சோதி மணி முடி வனியர்-பிரகாசம் பொருந்திய இரத்தின கிரீடந்தரிக்கின்றவர்களுமாகிய வன்னியர்களது, அணி இறை ஏந்திய-அழகிய கையினாற்றாங்கிய வைரம் ஆம் சிலையில்-வைரமலைக்குச் சமதையாகிய வில்லில் அடரும் நவமணி இரைய-நெருங்கக் கட்டிய புதிய மணிகள் இரைய, மாற்றலர்க்கு வயிறு கள கள என இரையும்-பகைவர்களுக்கு வயிறு கள கள என்று இரையும், எ-று ஏ-ஆசை. இறை ஆகு பெயர்.

**கருத்து.** வன்னியர்கள் வின்மணி இரைய பகைவர் வயிறு கள கள வென்று இரையும் என்பதாம்.

இதில் "பணி இறைக் கங்கணன் அடியைப் பழிச்சுனர்," என்றதனால், பெரிய புராணத்துட் கூறிய முடிமன்னர் அறுவர், குறு நிலமன்னர் ஐவர், திருவிளையாடலிற் கூறிய மது

ரைப் பாண்டியர்கள். இவைகளை யல்லாது சிதம்பரமாண்ட இரண்ணிய வன்மச்சோழன், அன்பாயச் சோழன், திருவருணை வல்லாள மகாராஜன், முசுகுந்த சக்கரவர்த்தி, முதலினோர் திருச்சரிதங்களானும் "வாதாபி முடிதுணி இறைவர்" என்றுதனல் உருத்திர வன்னிய மகாராஜன் சரிதத்தாலும் உணர்க

நாணியின் சிறப்பென்பது வில்லிற்றொடுக்கும் கயிற்றின் பெருமை. அது மணியோசை யற்றபிறகு அமைதலின் இங்கே வின்மணிச் சிறப்புக்குப் பின்வைத்துக் கூறினர்.

## நாணியின் சிறப்பு.

**கன்னாணும் புயமுடையார் கடனாணு மருளுடையார், மன்னாண்மைப் பொலிவுடையார் மணிமுடிவன்னியர்தாங்கும், வின்னாணின் வலியாலே வியனிலம் வாழ்வதுமடையார், தந்நாண மிழந்துவடி தாழ்ந்து கரங் குவிப்பதுமே. (கூ)**

(இ-ள்.) கல் நாணுபுயம் உடையார் - மலையும் நாணும் புயத்தினை யுடையவர்களும், கடல் நாணும் அருள் உடையார் - சமுத்திரமும் நாணும் அருளினை உடையவர்களும், மன் ஆண்மைப் பொலிவு உடையார்-நிலைபெற்ற ஆண்மைத் திறத்தினை யுடையவர்களுமாகிய, மணி முடி வன்னியர் இரத்தின கிரீடந்தரித்த வன்னியர்கள், தாங்கு - தாங்காநின்ற, வில் நாணின் வலியால் - வில் நாணின் பலத்தினால், வியன் நிலம் வாழ்வதும் - விசாலமாகிய இந்தப் பூமி நிலைத்திருப்பதும், அடையார் தன் நாணம் இழந்து வலிதாழ்ந்து கரம்குவிப்பதும் - பகைவர்கள் தமது நாணத்தை விடுத்து பலம் கெட்டு கையைக் குவித்து வணங்குவதும் ஆகும்.

**கருத்து.** வன்னியர்கள் எடுக்கும் வில் நாணியினால் பூமி நிலைத்திருத்தலும், பகைவர்கள் வணங்குதலும் ஆகும் என்பதாம்.

## வில்லேந்துநற் சிறப்பு

வில்லேந்துதற் சிறப்பென்பது: வில்லைத் தாங்குதலின் பெருமை.—அது நாணி அமைந்த பிறகு ஆதலின் இங்கே நாணியின் சிறப்புக்குப் பின்வைத்து நான்கு கவிகளால் கூறினர்.

### கலிவிருத்தம்.

உலகறிமும் முரசொலிப்ப வுலைவில்கலி வெருண்டொளிப்ப, நிலவெனவெண் குடைகவிப்ப நிகழ்பவம் பின் புறந்தவிப்ப, இலகுபுலிக் கொடிதழைப்ப விருங்குடிகள் விருந்தழைப்ப, அலகிலவா வியற்றும்வன்ய ரணிசிலையேந் துவதம்மா. (௬௦)

(இ-ள்.) வன்னியர் அணி சிலை ஏந்துவது - வன்னியர்கள் (தங்கள் கையினிடம்) அழகிய வில்லை ஏந்துவதானது, உலகு அறி மும்முரசு ஒலிப்ப - உலகெங்கும் பிரசித்தமாகும்படி மூன்று பேரிகை முழங்கவும், உலவு இல்கலி வெருண்டு ஒப்பது - துணிவினைக் கொள்ளும் கலியும் பயந்து மறையவும், நிலவு என வெண்குடை கவிப்ப - சந்திரனைப்போலும் வெள்ளிய முத்துக்குடை கவிந்து நிழல் செய்யவும், நிகழ்பவம் பின் புறந்தவிப்ப - நடக்கின்ற ஊழானது முதுகுகாட்டி ஓடி நின்று தவிக்கவும், இலகு புலிக்கொடி தழைப்ப-விளங்கா நின்ற புலிக்கொடியானது செழுமையோடு நிலைக்கவும், இரும் குடிகள் விருந்து அழைப்ப - பெரியகுடி சனங்கள் வரும் அதிதி முதலியவர்களுக்கு அழைத்து விருந்து செய்யவும், அலகு இல்வா இயற்றும் - (இவைகள் போலும் இன்னும்) கணக்கில்லாதன வாகிய விசேடங்களைச் செய்யும், அம்மா அசை.

**கருத்து.** வன்னியர்கள்வில்லைத் தாங்குதல் மூன்று பேரி முழங்கவும், கலி ஒளிக்கவும். சந்திர வட்டக் குடை நிழல் செய்யவும், ஊழ் முதுகுகாட்டி ஓடவும், புலிக்கொடி தழைத்து நிலைக்கவும், குடிகள் அதிதிமுதலியரை, விருந்துக்

காக அழைக்கவும், இன்னுங் கணக்கில்லாதனவும் செய்யும் என்பதாம்.

மும்முரசு, மங்கல முரசு, கொடை முரசு வெற்றி முரசு.

"இதில் நிகழ் பவம் பிறந்தவிப்ப" என்றதனால் நாயனர் "ஊழையும் உப்பக்கங் காண்ப குலவின்றி தாழாது ஞற்று பவர்" எனக்கூறியதுபோல் இவர்கள் வில்லெடுக்கும்போதே முயற்சியிற் றாழா ரென்பதைக் குறிப்பிட்டார்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

இதுவும் அது.

அலையை யெடுக்கா விடிற்பரவைக் காற்றலேதவ் வரவரசன், தலையையெடுக்கா விடிற்பொலிவு தாணிக் கேது விதுவளரும், கலையை யெடுக்கா விடிற்காட்சி கங்குற்கேது வன்னியர்செஞ், சிலையையெடுக்கா விடி லுயிர்க்குச் செழிப்பங்கேது செப்பிடினே. (கக)

(இ-ள்.) செப்பிடின் - சொன்னால், அலையை எடுக்கா விடில் பரவைக்கு ஆற்றல் ஏது-அலையை எடுக்காவிட்டால் சமுத்திரத்துக்கு-ஆற்றல் ஏது? அவ் அரவு அரசன் தலையை எடுக்காவிடில் தாணிக்குப் பொலிவு ஏது-அவ்வாதிசேடன் தலையை (நிமிர்ந்து) எடுக்காவிட்டால் பூமிக்கு விளக்கம் ஏது? விது வளருங் கலையை எடுக்காவிடில் கங்குற்கு காட்சி ஏது-சந்திரன் வளருங்கலையை எடுக்காவிட்டால் இரவிற்குச் சிறப் பேது? (என்பதுபோல்) வன்னியர் செம் சிலையை எடுக்கா விடின்-வன்னியர்கள் அழகிய வில்லை (தங்கள் கையினிடம்) எடுக்காவிட்டால், அங்கு உயிர்க்கு செழிப்பு ஏது-அப்பொழுது உயிர்களுக்கு செழிப்பென்பது ஏது? எ-று.

**கருத்து.** வன்னியர்கள் வில்லை எடுக்காவிட்டால் உயிர் களுக்கு செழிப்பே இல்லை என்பதாம்.